பதிவிறக்கம் செய்ய -

http://FreeTamilEbooks.com/ebooks/en$_{v}$anin$_{n}$ilavae

அட்டைப்படம் - லெனின் குருசாமி -

gurulenin n@gmail.com

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

*Ebook Publisher: http://freetamilebooks.com*

*Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com*

*Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com*

*Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation*

# பொருளடக்கம்

# 1. பகுதி - 1

அந்த தெருவே விழாக்கோலம் கொண்டிருந்தது . புது பந்தல் , வாழை மரம் , தோரணங்கள் எல்லாம் கட்டப்பட்டு சரவிளக்குகள் கொண்டு அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள் .

பொழுது சாய்வதற்குள் எல்லா வேலைகளையும் முடிக்கப் பலர் பரபரப்புடன் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தனர் . ரங்கநாதனுடன் இன்னும் இருவர் இந்த வேலையை மேற்பார்வை செய்வதும் , ஆலோசனை கூறுவதுமாக இருந்தனர் .

" தம்பி , உள்ளே சென்று எல்லோருக்கும் குடிக்க ஏதேனும் கொண்டு வரச் சொல், மொத்தம் ஒன்பது பேர் , நம் மூவரையும் சேர்த்து" " என்றார் ரங்கநாதன் .

அவர் தம்பி என்றது அருகில் நின்ற அவர் தம்பி மகன் நந்தனை

.

நந்தன் உள்ளே செல்வதற்குள் ஒரு பெரிய தட்டில் காபி

டம்ளருடன் வந்து கொண்டிருந்தாள் சுமதி , நந்தனின் அக்கா .

" நீங்கள் எல்லோரும் சாப்பிட்டீர்களா ?" என்று கேட்டபடி " நந்தா , இதை எல்லோருக்கும் கொடு " என்று பணித்தார் .

"நாங்கள் சாப்பிட்டாயிற்று பெரியப்பா . இன்னும் இந்து அக்கா வரலையே! எப்போதுதான் வருவார்கள் . புருஷன் வீட்டு வேலைதான் முக்கியமென்று அங்கேயே இருந்துட்டாங்களா ? இங்கே இருக்கிற வேலை எல்லாம் யார் பாக்குறது"

ரங்கநாதன் லேசாகச் சிரித்து விட்டு " இங்கே நீங்க எல்லாரும் இருக்கிறீர்கள் . அந்த வீட்டு வேலையைச் செய்ய அவமட்டும் தான் இருக்கா . சீக்கிரம் வந்திடுவா " என்று அவர் முடிப்பதற்குள் , கார் ஒன்று தெருவுக்குள் நுழைவது தெரிந்தது . " இதோ வந்துட்டாள் ".

காரில் இருந்து இறங்கிய படி " என்னப்பா , வெளியே எல்லா வேலையும் முடிந்தது போல? " என்றாள் இந்து என்கிற இந்துமதி .

அவள் இறங்கியதும் அவளிடம் அதுவரை இருந்த குழந்தை " தாத்தா " என்று ரங்கநாதரிடம் தாவியது .

காரின் மறுபுறம் இறங்கிய இந்துவின் கணவர் சக்திவேலனை பார்த்து " வாங்க மாப்பிள்ளை . அங்கே எல்லா வேலையும் எப்படி நடக்கிறது " என்றார் .

" எல்லாம் கிட்டத்தட்ட முடியும் தறுவாயில் தான் உள்ளது . அதைப் பார்ப்பதற்குள் இங்கே வர வேண்டும் என்று இழுத்து வந்து விட்டாள் "

" எதோ நான் சொன்னதும் வந்து விட்ட மாதிரிதான் . பூஜைக்கான தட்டுகளை அடுக்க வேண்டும் , மதியமே கொண்டு வந்து விடுங்கள் என்றேன் ."

" சரி சரி , ஆரம்பிக்காதே . போய் வேலையைப் பார் "

"உள்ளே வாருங்கள் மாப்பிள்ளை" என்று அழைத்துச் சென்றார் ரங்கநாதன் .

வீட்டிற்குள் வேலைகள் இன்னும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது . பெண்கள் சிலர் தட்டுகள் அடுக்கி வைத்துக் கொண்டிருந்தனர் . சிலர் பூக்களைத் தொடுத்துக் கொண்டிருந்தனர்

.  இன்னும் சிலர் கைகளில் மருதாணி இட்டுக் கொண்டு எதுவும் செய்யாமல் அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

" என்ன இந்து ? இவ்வளவு லேட்டாவா வருவது " என்றது ஒரு குரல் .

" அவள் என்ன செய்வாள் , இரு வீட்டிலும் முக்கியமான ஆள் அவள் தான் , " என்றது இன்னொரு குரல் .

சிரித்துக்கொண்டு " என்ன தட்டுகளை எல்லாம் நான் சொன்ன மாதிரி அடுக்கினீர்களா ?" என்று அடுக்கி வைத்திருந்த தட்டுகளைப் பார்த்தாள் .  " என்ன இரண்டும் வேறு வேறு மாதிரி இருக்கிறது ?" என்றாள் இந்துமதி .

இரண்டு வீட்டிலும் ஒரே மாதிரி இருந்தாள் "ஒன்றையே இரு இடத்திலும் வைத்த மாதிரி இருக்கும் .  இருவீட்டிற்கும் வரும் உறவினர்கள் இருப்பார்கள். மற்றும் புகைப்படத்திலும் ஓரே மாதிரி இருக்கும் என்று சாரு தான் மாற்றச்சொன்னாள்" என்றாள் சுமதி

'

“அதுவும் சரிதான் . சாரு எங்கே ?” என்று கேட்டுக் கொண்டிருந்த போதே ஒரு அறையிலிருந்து வெளியே வந்தாள் சாருமதி .

மணப்பெண்ணிற்கான உற்சாகம் எதுவும் அவள் முகத்தில் தென்படவில்லை . கைகளிலும் மருதாணி இட்டுக் கொண்டு நின்றாள் . தன் அக்காவையும் அவள் கணவனையும் வரவேற்று தன் அம்மாவிடம் திரும்பினாள் . சாருவின் கோபத்தை உணர்ந்து ” எங்கே கையை காட்டு , நல்லா இருக்கிறது ! கொஞ்சம் சர்க்கரை தண்ணீர் வை . இதோ நான் எடுத்துவிட்டு வருகிறேன் ”

“ரொம்ப அக்கறை ! அதுதான் இவ்வளவு சீக்கிரம் வந்தாயா?” என்றாள் சாரு .

” என்னடா பண்றது . அங்கேயும் எல்லாம் எடுத்து வைக்கவேண்டும் . நிறைய வேலை . கோபித்துக் கொள்ளாதே ” என்று அங்கிருந்து நகர்ந்தாள் இந்து .

இப்போது அவள் கோபம் இந்துவின் கணவனின் மேல் திரும்பியது . உடன் பிறந்த தங்கையின் திருமணம். மற்ற நெருங்கிய

உறவினர்கள் எல்லோரும் வந்துவிட்டனர் இந்துவைத் தவிர . இதற்கெல்லாம் இந்துவின் கணவன் தான் காரணம் என்ற எண்ணம் சாருவிற்கு . தன் அக்காவைத் தாமதமாக அழைத்துவந்தது மட்டும் இல்லை, இன்னும் பல கோபங்கள் அவளுக்கு இருந்தது . அதற்குள் இந்து வர அவளை உள்ளே அழைத்துச் சென்று கைகளில் சர்க்கரை தண்ணீரை வைத்தாள் . "நாளை காலை பார்லரில் இருந்து சீக்கிரம் வரச் சொன்னாயா ? இங்கே பூஜை ஏழு மணிக்கே தொடங்க வேண்டும் . அதற்குள் நீ தயாராக வேண்டும் ."

"ஹ்ம்ம்"

" அதிக மேக்கப் போட்டு விடாதே . ஆளே அடையாளம் தெரியாமல் செய்துவிடுவார்கள் ! பக்கத்தில் சுமதியை வைத்துக்கொள் . "

" நாளையும் இப்படித்தான் கடைசியாக வருவாயா ?"

"ஏய் ! என்ன நீ நிலைமை புரியாமல் பேசுகிறாய் ! அந்த வீட்டில் எல்லாம் நான் செய்ய வேண்டும் ."

" ஏன் ? உன்னை விட்டால் வேறு ஆளே இல்லையா ? அதுதான் உன் நாத்தனார் இருக்கிறாளே ! அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் ? "

" பாவம் டி அவள் இரண்டு பிள்ளைகளும் படுத்தி எடுக்கிறார்கள் ! ஒரு வேலையும் செய்ய முடியவில்லை அவளால்! "

"அதெல்லாம் சாக்கு ! இங்கே மட்டும் யார் இருக்கிறார்கள். நீ தானே செய்ய வேண்டும் ?"

" இன்றும் நாளை மட்டுமே இப்படி . மறுநாள் எல்லா சடங்குகளும் மண்டபத்தில் தானே . அப்போது நானே எல்லாம் செய்வேன் "

"யாருக்குத் தெரியும் ! அப்போதும் நீ உன் வீட்டுக்குச் செய்ய ஓடிக்கொண்டிருப்பாய்"

"ஏய் ! இனிமேல் அதுதான் உன் வீடும் மறந்துவிடாதே !"

ஆம் ! சாருவின் வீடும் இந்துவின் வீடும் இனிமேல் ஒன்றுதான்

. சக்திவேலின் தம்பி மனோகரனுக்கும் சாருமதிக்கும் திருமணம் நிச்சயமாகி இருந்தது .

ஏதோ பேசச் சாரு வாயெடுப்பதற்குள் " இந்து! சீக்கிரம் கிளம்பவேண்டும் . இன்னும் சமையல் பொருட்கள் சில வரவில்லையாம் ! நான் போய் பார்க்க வேண்டும் ".

இந்து பேசுவதற்குள் " நீங்கள் போய் உங்கள் வேலையைப் பாருங்கள் . அக்காவிற்கு இங்கே இன்னும் வேலை இருக்கிறது ! " என்றாள் சாரு .

"ஏய் ! சும்மா இருடி" என்று இந்து கணவனிடம் சென்றாள்.

சக்திவேலின் முகத்தில் கோபம் தெரிந்ததும் " இன்னும் பந்தியில் வைக்க இனிப்பு தயாராகவில்லை ! எல்லாம் ஒன்றாக எடுத்துச்சென்றால் அலைச்சல் குறைவு " என்றார் ரங்கநாதனின் மனைவி தாமரை .

"இன்னும் எவ்வளவு நேரம் ?" என்றான் சிடுசிடுப்புடன் .

அதற்குள் "நீங்கள் அவசரம் என்றால் புறப்படுங்கள்

மாப்பிள்ளை .எல்லாம் தயாரானதும் இங்கிருக்கும் காரில் இந்துவிடம் எல்லாம் கொடுத்து அனுப்புகிறேன் .” என்றார் ரங்கநாதன் .

“அப்படியானால் , தட்டுகளை எல்லாம் நாங்கள் கொண்டு செல்கிறோம் . இனிப்பை நீங்கள் கொண்டு வந்து விடுங்கள் . இந்து கிளம்பு”

அதற்குமேல் இந்து தட்டுகளை எடுத்துக்கொண்டு தயாரானாள்

.

சாருவுக்கு சக்திவேலன் மேல் இன்னும் கோபம் அதிகரித்தது . சக்திவேலன் மீது மட்டும் இல்லை . அவன் முழு குடும்பத்தின் மேலும் , அவள் வருங்காலக் கணவன் மனோகர் உட்பட. இன்னும் தெளிவாகச் சொல்வதானால் அவளுக்கு இப்போது எல்லோர் மீதும் கோபம். இந்த திருமணம் நடக்கக் காரணமான எல்லோர் மீதும் . அவளைப் பொறுத்தவரை இது ஒரு கட்டாய கல்யாணம் . முடிந்தவரை இந்த திருமணம் வேண்டாம் என்று போராடிப் பார்த்தாள். அவள் போராட்டம் வெற்றி பெறவில்லை.

# 2. பகுதி - 2

சரியாக நாற்பது நாட்கள் முன் நடந்தவற்றை எண்ணிப் பார்த்தாள் சாரு .

“அப்பா லேட் ஆகிறது , சீக்கிரம் வாங்க !”

“ஏய் ! ஏன் கத்துர . அப்பா வருவார் . அதற்குள் உன் மதிய உணவை எடுத்து வை .”

“நீங்களே பேக் பண்ணுங்கள் ப்ளீஸ் !” என்றாள் உணவு மேஜையில் அமர்ந்தபடி .

“உன் வேலையை நீயே செய்து பழகு சாரு” என்றபடி வந்தார் ரங்கநாதன் .

“உங்கள் லஞ்ச் பாக்ஸ் -ஐ யாருப்பா எடுத்து வைத்தது” என்றாள் லேசாகத் தலையைச் சாய்த்தபடி . ரங்கநாதனின் பல வேலைகளை அவரே செய்துகொண்டாலும் உணவு விஷயம் முழுவதும் செய்வது அவர் மனைவி தாமரை தான் . அவள் கிண்டல்

செய்வதைப் புரிந்து கொண்டு ,

“தப்பு தான் . உன்னிடம் வாயைக் கொடுத்திருக்கக் கூடாது” என்றார் ரங்கநாதன் .

“ஏய் ! காலையிலிருந்து அப்பா எவ்வளவு வேலை செய்திருக்கிறார் தெரியுமா ? பின் பக்க தோட்டம் சுத்தம் செய்து , இதோ சமையலுக்குக் காய்கறி எல்லாம் வெட்டி கொடுத்தார் . நீ? ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆள் உனக்கு வேண்டும் . தலைக்கு எண்ணெய் வைக்க, சாம்பு எடுத்துக் கொடுக்க , டிரஸ் அயன் பண்ண . இன்னும் சிறு பிள்ளையா நீ? வீட்டில் ஒரு வேலை செய்வதில்லை” என்றாள் தாமரை. ” உன் அக்கா எல்லாவற்றையும் கற்றுக் கொண்டே இப்போது புகுந்த வீட்டில் படாதபாடு படுகிறாள் . நீ என்ன செய்வாயோ ?”

“போதும் அம்மா அர்ச்சனை , சீக்கிரம் டிபன் வையுங்கள்” என்று தன் தட்டை நீட்டினாள் .

மகளை முறைத்தபடி உணவு பரிமாறி விட்டு மூவரும் காலை சிற்றுண்டியை முடித்தனர் . முடிந்த வரை காலை உணவும் , இரவு

உணவும் சேர்ந்து உண்ணும் படி பார்த்துக் கொள்வார்கள் . சாரு தன் பையை எடுத்துக்கொண்டு கிளப்பவும் அவளுடன் தினமும் செல்லும் தோழி தேவியும் வரச் சரியாக இருந்தது . இருவரும் அலுவலகத்திற்கு ஒன்றாகச் சென்று வருவார்கள் . இனி வரும் நாட்கள் வேறுவிதமாக மாறப்போகிறது என்ற கவலை எதுவும் இன்றி உற்சாகமாகச் சென்றாள் சாரு.

சாரு செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்த தாமரை தொலைப்பேசி ஒலி கேட்டு உள்ளே வந்தாள் . அழைப்பில் இந்துவின் மாமனார் சுந்தரம் .

“நான் சுந்தரம் பேசுறேன் . எல்லாரும் நல்லா இருக்கீங்களா ?”

“எல்லோரும் நல்லா இருக்கோம் . நீங்க எப்படி இருக்கீங்க அண்ணா ?, வீட்டில் அண்ணி மாப்பிள்ளை எல்லோரும் சுகமா ?”

“எல்லாரும் நல்லா இருக்காங்க . ரங்கன் வேலைக்கு கிளப்பிட்டாரா ?”

“இன்னும் இல்லை அண்ணா . இதோ தருகிறேன்” என்று

கணவரிடம் கொடுத்தாள்.

சுந்தரம் ரங்கநாதன் வீட்டிற்கு வருவதாகவும் . தனக்காக காத்திருக்கும் படியும் கூறினார் . சிறிது நேரத்தில் வந்தவர் தன் இளைய மகன் மனோகரனுக்கு சாருவை கேட்டு வந்திருந்தார்.

முதலில் இதை எதிர்பாராத ரங்காநாதன் , என்ன பேசுவது என்று வெகுவாக தயங்கினர்.

“என்ன ரொம்ப யோசிக்கிறீங்க ? ஏற்கனவே வேறு இடம் எதுவும் பேசி வைத்திருக்கிறீர்களா ?” என்றார் சுந்தரம் .

“அதெல்லாம் ஒன்றும் இல்லை . இப்படி திடீர் என்று கேட்டதும் , என்ன சொல்றதுன்னு தெரியல”.

“மனோகர் பத்தி உங்களுக்கு தெரியும் . நான் புதுசா சொல்ல ஒன்னும் இல்ல . இப்போ பம்பாய்-ல வேலை. சீக்கிரம் பக்கத்துல ஒரு வேலைய பாக்கறதா சொன்னான் . இதை தவிர உங்களுக்கு வேறு கருத்துகள் இருந்தால் சொல்லுங்கள்” என்றார் சுந்தரம்.

மனோகரனுக்கு பெண் பார்த்துக் கொண்டிருப்பது ரங்கநாதன்

தம்பதிக்கு தெரிந்துதான் இருந்தது . இந்துமதி இது பற்றி சொல்லியிருந்தாள் . ஆனால் அவர்கள் சாருவை கேட்கக்கூடும் என்று நினைத்திருக்கவில்லை.

பொதுவான நண்பர்கள் மூலம் இந்துமதிக்கு சக்திவேலின் வரன் வந்தது . ரங்கநாதன் குடும்பத்தை விட சுந்தரத்தின் குடும்பம் அதிக வசதி பெற்றிருந்தனர் . முதலில் ரங்கநாதன் தயங்கினார் . ஒரு தனியார் நிறுவனத்தின் வேலை செய்யும் அவரின் நடுத்தர வாழ்க்கை அவரை தயங்க வைத்தது . எந்த எதிர்பார்ப்பும் இல்லை என்று சுந்தரம் குடும்பம் இந்துமதியை மருமகளாய் ஏற்றனர் .

இப்போது சாருவை அதே வீட்டிற்கு கொடுப்பது என்றால் அதிகம் யோசிக்க எதுவும் இல்லை என்று ரங்கநாதன் எண்ணினார்.

அன்றே மணமக்களுக்கு பொருத்தம் பார்க்க முடிவெடுத்தனர் . இரு குடும்பத்திலும் பெற்றோர்கள் சென்று பொருத்தம் பார்க்க திருமண தேதி குறிக்கும் அளவுக்கு சென்றது . எல்லாம் அதிவேகமாக நடப்பது போல் உணர்ந்தாள் தாமரை . மகளிடம் திருமணம் பற்றி ஒன்றும் பேசி இருக்கவில்லை . ஆனால் சொல்ல

தயங்கி கொண்டிருக்கையில் , " நாமே எல்லாம் முடிவு செய்தால் எப்படி ? முதலில் மனோகரனுக்கு பெண்ணை பிடிக்க வேண்டும் ." என்றாள் சுந்தரத்தின் மனைவி விஜயா .

தங்களின் மகளின் எண்ணத்தை விஜயா குறிப்பிடாதது தாமரைக்கு சற்று வருத்தமாக இருந்தது .

" அதுவும் சரிதான் . ஜாதகம் பொருந்திய சந்தோஷத்தில் நான் கல்யாண தேதி குறிக்க போயிட்டேன் . முதலில் இருவருக்கும் பிடிக்க வேண்டும் . அவர்கள் தான் வாழப்போவது . இன்றே அவர்களிடம் பேசி விடலாம் " என்றார் சுந்தரம் . மனோகர் சாருமதி இருவரிடமும் பேசிவிட்டு முடிவெடுக்க எண்ணினார்கள் .

சுந்தரம் குடும்பத்தினர் மோட்டார் மற்றும் மின் சாதனங்களுக்கான கடைகளை வைத்திருந்தனர் . விற்பனை, நிறுவல் மற்றும் பழுது பார்ப்பது என்று அந்த பகுதியில் பிரபலமான நிறுவனமாக திகழ்ந்தது.

சுந்தரம் சக்திவேல் தொழிலை பார்த்துக்கொண்டனர் . மனோகரனுக்கு இதில் ஈடுபாடு சற்றே குறைவு என்ற போதிலும்

தந்தைக்கு அவ்வப்போது உதவி செய்வான் . அவன் ஒரு பன்னாட்டு இயந்திரம் தயாரிக்கும் நிறுவனத்தில் வேலை செய்து வந்தான் . இப்போது அவனுக்கு மும்பையில் வேலை. அவன் வேலை நேரத்தில் பெரும்பாலும் தொலைபேசி அழைப்புகளை ஏற்பதில்லை என்பதால் , மாலையில் பேசலாம் என்று இரு வீட்டாரும் முடிவெடுத்து அவரவர் வீட்டிற்கு சென்றனர் .

வீட்டிற்கு வந்த ரங்கநாதனுக்கு ஏக மகிழ்ச்சி . மாலையில் சாரு வீட்டை அடைவதற்கு சற்று நேரத்திற்கு முன் தான் ரங்கநாதனும் தாமரையும் வீட்டை அடைத்தார்கள் .

“என்ன அப்பா! ஆபீஸ் ல இருந்து இப்போதான் வந்தீங்களா? இன்னும் டிரஸ் கூட மாற்றவில்லை !”

“வா டா ! இப்ப தான் வந்தோம் .”

“வந்தோமா? ரெண்டு பேரும் வெளியே போயிருந்தீங்களா ?” என்ற படி தந்தையின் அருகில் சென்று அமர ” முதலில் கை கால் எல்லாம் கழுவி டிரஸ் மாத்திட்டு வா ” என்றாள் தாமரை .

மகள் உள்ளே சென்றதும் " எனக்கு கொஞ்சம் பயமா இருக்குங்க !" என்றாள் தாமரை .

" ஏன்? அவள் நிச்சயம் சரி என்று தான் சொல்லுவாள் . வேண்டாம் என்று சொல்ல என்ன காரணம் இருக்கு ?"

"என் பயம் அது இல்லை . இவள் அந்த வீட்டில் எப்படி சமாளிப்பாள் என்று தான்"

"நீ தேவை இல்லாமல் யோசிக்கிறாய் . சாரு எல்லாவற்றையும் சமாளிப்பாள் . அது மட்டும் இல்லாமல் இந்து அவளுடன் இருக்கிறாளே ! அவள் பார்த்துக் கொள்வாள் ."

"அது இன்னும் என் கவலையை அதிகப்படுத்துகிறது . இவளால் இந்துவிற்கு சங்கடம் நேராமல் இருக்க வேண்டும்"

தாமரையின் கவலைக்கு காரணம் இருந்தது . இந்து மிகவும் அமைதியானவள் . அதிகம் பேச மாட்டாள் . எல்லாவற்றிலும் பொறுப்பாக நடந்துகொள்வாள் . இளையவள் அவளுக்கு நேர்மார் . வாய் துடுக்கு அதிகம் . இன்னும் எல்லாவற்றிலும்

ஒரு பொறுப்பின்மை , விளையாட்டுத்தனம் இருக்கும். இந்து திருமணம் ஆகி மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன . அதனால் இந்து வின் புகுந்த வீட்டின் எதிர்பார்ப்புகள் என்ன என்று தாமரை நன்கு அறிந்திருந்தாள் . சாரு அவர்களின் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி நடந்து கொள்வாளா? என்ற கவலை அந்த தாயை பற்றிக்கொண்டது. கணவனிடம் இதுபற்றி பேசிக்கொண்டிருந்த போது சாரு அங்கே வந்தாள் .

" என்ன ? தீவிரமான பேச்சுவார்த்தை போலிருக்கிறது " என்ற படி பெற்றோர்களுடன் சென்று அமர்ந்தாள் .

" முக்கியமான விஷயம் தான் . எல்லாம் உன் கல்யாணம் பற்றித்தான் " என்றார் சுந்தரம் .

"அப்பா , ப்ளீஸ் . இன்னும் ஒரு இரண்டு வருஷம் . இப்போதுதான் டிகிரி முடித்தேன் . கொஞ்ச நாள் உங்களோடு ஜாலியா இருந்துட்டு அப்புறம் அதை பற்றி பேசலாம். அம்மா எனக்கு ஒரு காபி" என்றாள் .

"இல்லை அம்மா ! இது நல்ல இடம் . அதுதான்!"

“அக்காவிற்கு செய்தது போல் எனக்கும் செய்யலாம் என்று நினைக்காதீர்கள்! எனக்கு இப்போது திருமணம் வேண்டாம்”

“உன் அக்காவிற்கு அப்படி என்ன நாங்கள் செய்துவிட்டோம் ?”

“தெரியாத மாதிரி கேட்கிறீர்களே ? அவளும் என்னை போல் வேலைக்கு போக வேண்டும் . சொந்தக்காலில் நிற்க வேண்டும் . யாரை சாராமல் இருந்து பழக வேண்டும் என்றெல்லாம் நினைத்தாள் . . ஆனால் நல்ல வரன் என்று சொல்லி உடனே கல்யாணம் செய்து வைத்துவிடீர்கள் . இப்போது அவள் அந்த வீட்டில் எல்லாவற்றிக்கும் ‘ஆமாம் சாமி’ போட்டு கொண்டு காலம் தள்ளுகிறாள். என்னால் அப்படி இருக்க முடியாது”

தாமரை இது போன்ற பேச்சை எதிர்பார்த்ததால், ரங்கநாதனை போல் அதிகம் அதிர்ந்து விட வில்லை . ஒரு வேலை வரன் பற்றி சொன்னாள் மகள் ஏற்கக்கூடும் என்று எண்ணி,” மாப்பிள்ளை யார்? என்று கேட்காமலே முடிவை சொல்லாதே . உன் மாமா சக்திவேலின் தம்பி மனோகர் தான்!” என்றார்.

சாரு அதிர்ந்து தான் போனாள். மனோகரன். தெரியாத முகம் இல்லை என்றாலும் பெரிய பரிட்சயம் இல்லை . அவனிடம் விருப்பு வெறுப்பு என்று எதுவும் இல்லை ஆனால் ஒரு இளங்கலை பட்டம் பெற்று ஒரு வேலையையும் சம்பாதித்து இருந்த சாரு வேறு பல கனவுகள் கண்டிருந்தாள் . ஐந்து இலக்கில் சம்பளம் . பெற்றோருடன் இரண்டு அல்லது மூன்று வருடங்கள் சுதந்திரமாக கழிக்கவேண்டும் என்று எண்ணியிருந்தாள் . உண்மையில் இது இந்துவின் கனவாகவும் இருந்தது . நல்ல இடத்திலிருந்து வரன் வந்ததும் இந்துவின் திருமணம் நிச்சயமானது . அதன் பின் எல்லாம் பகல் கனவாக போனது . அதனாலேயே திருமணப்பேச்சு இப்போதைக்கு வேண்டாம் என்று சாரு எண்ணினாள்.

சாருவின் மனதில் இன்னும் பல விஷயங்கள் ஓடிக்கொண்டிருந்தன. எல்லாவற்றையும் பெற்றோரிடம் சொல்ல அவளுக்கு விருப்பம் இல்லை .

"எனக்கு இந்த திருமணம் வேண்டாம் . கொஞ்ச நாள் போகட்டும்" என்று அங்கிருந்து நகர்ந்தாள்.

ரங்கநாதன் பெரும் ஏமாற்றம் அடைந்திருந்தார். மனைவியின் முகத்தை பார்த்தார் . தாமரை அவரளவு ஏமாற்றமடையவில்லை என்று தெரிந்தது . "ஏன் சாரு இப்படி சொல்கிறாள் ? நீயும் முதலில் இருந்து ஏதோ தடை சொல்லிக் கொண்டிருக்கிறாய் . எனக்கு ஒன்றும் புரியவில்லை . இதைவிட ஒரு நல்ல சம்பந்தம் நமக்கு கிடைக்குமா ? மனோகருக்கு என்ன குறை ?"

"அவளுக்கு மனோகரை பிடிக்கவில்லை என்று சொல்லவில்லை . இப்போது திருமணம் வேண்டாம் என்கிறாள்"

" அவள் ஏன் அப்படி சொல்ல வேண்டும் ?"

"அது தான் சொன்னாளே ! நம்முடன் கொஞ்ச நாள் இருக்க வேண்டும் என்று"

"புரியாமல் பேசுகிறாய் தாமரை ! இந்துவின் மாமனார் இந்த சம்பந்தம் பேச வந்ததும் எவ்வளவு சந்தோசப் பட்டேன் தெரியுமா ? நம் இரு மகள்களும் ஒரே வீட்டில் வாழப் போகிறார்கள் . ஒருவருக்கு ஒருவர் ஒத்தாசையாக எப்போதும் இருக்கலாம் . வேறு வேறு இடத்தில் திருமணம் நடந்தால் இருவரும்

அப்படி இருக்க முடியாது . இது நாள் வரையில் இருவரையும் ஒரேபோல் வளர்த்தோம், எந்த வேறுபாடுமின்றி. ஆனால் திருமண விஷயத்தில் அப்படி செய்ய முடியுமா என்று எனக்கு பெரும் சந்தேகம் . இந்துவை வசதியான வீட்டில் கட்டி கொடுத்தோம் . அவளுக்கு அப்படி தானாக அமைந்தது . அப்படி வேறொரு இடத்தை சாருவுக்கு தேட முடியுமா ? அப்படியே தேடினாலும் அவர்கள் எதிர்பார்ப்பிற்கு நம்மால் செய்ய முடியுமா ? ஒருவேளை நமக்கு ஏதுவாக பார்த்தால் இருவருக்கும் பொருளாதார நிலையில் எவ்வளவு வேறுபாடு இருக்கும் ! ஏதோ சாருவுக்கு குறைத்து செய்துவிட்டதாக நமக்கு எப்போதும் உறுத்தும்''

"நீங்கள் தேவையில்லாமல் யோசிக்கிறீர்கள் . யாருக்கு எது அமைய வேண்டும் என்று இருக்கிறதோ அப்படியே அமையும். நம்மால் முடிந்த வரை சிறப்பாக செய்வோம் .''

"அதைத்தான் சொல்கிறேன் ! சிறப்பாக ஒன்று நடக்க இருக்கும் போது அதை ஏன் நாம் தட்டி கழிக்க வேண்டும்''

"சிறப்பு என்பது பொருளாதார நிலையை மட்டும் வைத்து

சொல்ல முடியாது . இல்லையா!''

''என்ன பேசுகிறாய் ? மனோகருக்கு வேறு எதில் குறை ? நல்ல குடும்பம் , நல்ல குணம் . வேறென்ன வேண்டும் ? நம்முடன் இருக்க ஆசை என்று வரும் நல்ல வாழ்க்கையை உதரக்கூடாது . சாருவிடம் பேசு''.

கணவன் சொல்வதில் உண்மை இருந்தது. ஆனால் சாருவை எப்படி சம்மதிக்க வைப்பது ? சாருவின் இந்த முடிவுக்கு இந்து தான் காரணம் என்று தாமரை நன்கு அறிவாள் .

# 3. பகுதி - 3

பெண் சுதந்திரம் , சுயமரியாதை என்று காரணங்களை சொல்லி புரட்சி என்று நினைத்தது தவறான உதாரணமாக இருக்கும் பெண்ணல்ல சாரு . இந்துவின் திருமணத்திற்கு பிறகு பல முடிவுகளை சாரு எடுத்திருந்தாள். தனக்கென்று ஒரு வேலை , கொஞ்சம் சேமிப்பு , யாரையும் எதிர்பார்க்காமல் இருக்கும் தன்னம்பிக்கை . இவை மூன்றையும் திருமணத்திற்கு முன் அடைய வேண்டும் . திருமணத்திற்கு பிறகு பல பெண்களுக்கு இவைகளை அடைய வாய்ப்போ தைரியமோ இல்லாமல் போகலாம் . அவள் தமக்கை இதற்கு நல்ல உதாரணம் . இந்து சாருவை போல் மிகவும் துடுக்கானவள் இல்லை என்றாலும் , நல்ல திறமைசாலி , பொறுப்பானவள் .

இன்னும் சொல்லப்போனால் சாருவை விட திறமைசாலி . வீட்டில் இருக்கும் பொருட்களை கொண்டே கைவினைப் பொருட்களை செய்வாள் . உணவில் பல புதுமைகள் செய்வாள்

. வீட்டுத் தோட்டம் அமைப்பது அதை பராமரிப்பது என்று எல்லாவற்றிலும் ஒரு நேர்த்தி இருக்கும் .

ஆனால் அவள் திருமணத்திற்கு பிறகு அதை பார்க்கவோ ஊக்குவிக்கவோ அவள் புகுந்த வீட்டில் யாருக்கும் நேரம் இருக்கவில்லை . புகுந்த வீட்டார் சொல்வதை செய்யும் பொம்மையாய் மாறிப்போனாள் . அவர்களிடம் தன் விருப்பத்தை சொல்ல கூட அஞ்சி நிற்கும் பெண்ணாய் , தன் சகோதரி மாறியதற்கு காரணம் இந்துவின் தன்னம்பிக்கை குறைவு ஒரு காரணம் என்று சாரு அரிவாள் . ஆனால் இந்துவை இப்படி வைத்திருப்பதற்கு அவள் புகுந்த வீட்டார் முக்கிய காரணம் என்பது சாருவின் எண்ணம் . வீட்டிற்கு வரும் மருமகள் அவர்கள் சொல்வதை சரி என்று அப்படியே கேட்டுக் கொள்ள வேண்டும் என்பது சக்திவேலன் குடும்பத்தின் எண்ணம் . அதை இந்துவும் அப்படியே செய்து வருகிறாள்

சாருவால் அப்படி இருக்க முடியாது . அப்படி ஒரு சூழல் அவளுக்கு அமையக்கூடாது என்றால் , அவள்

தன்னம்பிக்கையையும் , தைரியத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும் . அவளுக்கு எது வேண்டும் வேண்டாம் என்ற முடிவெடுப்பது அவளாகவே இருக்க வேண்டும் . இதெல்லாம் இந்துவின் வீட்டில் (புகுந்த வீட்டில் ) நடக்காது .

இப்படி ஒரு வீட்டுக்கு மட்டும் மருமகளாக போகக்கூடாது என்று சாரு பலமுறை நினைத்ததுண்டு .

சாருவின் பிடிவாதம் சில மணி நேரங்களே நீடித்தது . சாருவின் முடிவை கேட்க அழைத்த இந்து நடந்ததை கேட்டு அதிர்ந்து போனாள் . இந்துவிற்கு ஏமாற்றத்தை விட பயம் அதிகமாக பற்றிக்கொண்டது . அவள் புகுந்த வீட்டில் என்ன சொல்வார்களோ என்ற கவலை அவளை பற்றிக்கொண்டது . உடனே தங்கையிடம் பேச நினைத்தாள் . ஆனால் தொலைபேசியில் பேசுவது சரி வராது என்று நேரில் பேச எண்ணினாள் . ஆனால் கணவனிடம் என்ன சொல்வது ? என்று யோசித்து கணவனிடம் சென்றாள் .

" நான் அம்மா வீட்டுக்கு போகட்டுமா ?"

"இப்போ என்ன?"

“சாருகிட்ட கல்யாணத்தை பத்தி பேச”

“நீ என்ன பேசப்போறே ? அதுதான் எல்லோரும் முடிவு பண்ணியாச்சே !”

சக்திவேலுக்கு என்னவென்று சொல்வது ? தங்கை திருமணத்தை மறுக்கிறாள் என்றால் இங்கே நிச்சயம் ஒரு பூகம்பம் வரும். சக்திவேலன் குடும்பம் சாருவை கேட்டதே பெரும் ஆச்சரியம் . அவர்கள் எல்லோரும் சம்மதித்த பிறகு தங்கை இப்படி செய்தாள் உருளப்போவது இந்துவின் தலை தான் . சட்டென்று யோசித்து

“எனக்கு அம்மா அப்பா கூட போய் இந்த விஷயத்தை நானே சாரு கிட்ட சொல்லணும் னு ஆசை . நீங்க என்ன சொல்லுவீங்களோன்னு பயம் . இப்போ போகணும் போல இருக்கு” என்றாள் சோகமாக .

சக்திவேல் சிரித்தபடி “அடடா , என் மேல் உனக்கு அவ்வளவு பயமா ?”. மனைவியின் அருகில் வந்து லேசாக மூக்கை பிடித்து ஆட்டி விட்டு ” சரி போயிட்டு வா. ஆனா இன்னும் இந்து கிட்டே

பேசலையா?” . என்றான் .

சற்றே திடுக்கிட்டு ” அது , இன்னும் அவள் வீட்டுக்கு வரல . அதுதான் !” என்றாள் இந்து .” அத்தைகிட்டே சொல்லணும் ! நீங்க கேளுங்க. அத்தை என்ன சொல்லுவாங்களோ ? ”

அவள் பயந்தது போல ” இவ அங்க போய் என்ன செய்ய போறா ? மனோகரை வேண்டாமுன்னு சொல்லுவாளா இவள் தங்கை ” என்றாள் விஜயா வெகு ஏளனமாக .

” அதில்லை அம்மா ! இவளே போய் சாருகிட்டே சொல்லணுமாம் ”

“இவ சொன்னா தான் அவள் சரின்னு சொல்லுவாளா ?” அதற்குள் அங்கு வந்த சுந்தரம் ” ஏதோ ஆசைப்படுறா ! அதுக்கு எதுக்கு நீ சும்மா கேள்வி கேட்குறே ? நீ போய் வா மா . கல்யாண வேலை எல்லாம் நீதான் ரெண்டு வீட்டுக்கும் பார்க்கணும் ” என்று சிரித்தார் .

இந்துவிற்கு தலையை சுற்றுவது போல் இருந்தது . ‘தன்

தங்கையின் பதில் இந்த வீட்டில் தெரிந்தால் ?'.

"சரி ! கிளம்பு . கொண்டுபோய் விடுறேன்" என்றான் வெற்றிவேல் .

" வேண்டாம் ! நான் ஆட்டோவில் போகிறேன் ". அவன் வந்தால் சாருவிடம் நேரடியாக கேட்கலாம் . சாரு மறுத்து விடலாம் . இந்த குழப்பத்தை தவிர்க்க அவள் அப்படி சொன்னாள் .

" ஏன் தேவை இல்லாம ஆட்டோ ?" என்றார் சுந்தரம் .

" இல்லை மாமா ! காலையில் இருந்து அவர் அலஞ்சிட்டே இருக்கார் . இப்போ மறுபடியும் கார் எடுத்து என்னை கொண்டு போய் விட்டுட்டு மறுபடியும் வரணும் . அவர் ரெஸ்ட் எடுக்கட்டும் . ஆட்டோ பிடிச்ச இருபது நிமிஷத்துல போயிடலாம் . " என்றாள் . அன்று சக்திவேல் சற்று அதிகமாகவே சுற்றி அலைந்தது உண்மைதான் .

" நீ கிளம்பு. பையனை இங்கே விட்டுட்டு போ . அவனை ஏன் வீணே அலைய வைக்கணும் " என்றாள் விஜயா .

சரி என்று கிளம்பினாள் . மறுநாள் காலையில் வந்து விட வேண்டும் என்று சக்திவேல் சொல்லியிருந்தான் . ஆட்டோவில் ஏறியதிலிருந்து சாருவை எப்படி சம்மதிக்க வைக்க வேண்டும் என்று யோசித்துக்கொண்டே தான் சென்றாள் .

இந்து வீட்டை அடைந்ததும் , செடிகளுக்கு தண்ணீர் ஊற்றி பராமரித்து கொண்டிருந்த ரங்கநாதன் '' வா டா , குழந்தையை கூட்டி வர வில்லையா ?''

''இல்லை அப்பா , சாரு என்ன செய்யரா ?''

'' உள்ள தான் இருக்கா , அம்மா சொன்னாளா ?''

''ஹ்ம்ம் , நான் பேசுறேன் பா'' என்று இருவரும் உள்ளே வந்தார்கள் .

தாமரை சமையல் அறையில் இருந்தாள் . '' அம்மா '' என்று அழைத்தபடி அருகில் வந்தாள் இந்து .

''என்னடா ? திடீர்னு''

''ஏன் ? உங்களுக்கு தெரியாதா ? ஏன் வந்திருக்கிறேன் னு ?''

“நீ என்ன பேசப்போறே ? அவ வேண்டாம்னு சொன்னதே உன்னால தான்”

“நான் என்னம்மா செய்தேன் ?”

“உன் வீட்டில் நடப்பதையெல்லாம் , சாரு கிட்ட ஒன்னு விடாம சொல்லி இருக்கே . அப்புறம் அவ எப்படி கல்யாணத்துக்கு ஒத்துப்பா ?”

“அது ..,நான் எதோ ...”

“இந்து , சாரு உன் வீட்டுக்கு வந்தா , உனக்குத்தான் பிரச்சனை . அவள் எடுத்த முடிவு உனக்கு நல்லதுதான் .”

“ஐயோ ! புரியாம பேசாதீங்க மா ! அங்கே எல்லாரும் கல்யாணம் முடிவான மாதிரி பேசறாங்க . இப்போ போய் சாரு வேண்டாம் னு சொன்னா , எல்லோரும் என்னைத்தான் ஒரு வழி பண்ணுவாங்க .”

“அப்போ ! என் கல்யாணத்தை பற்றி முடிவெடுக்க எனக்கு எந்த உரிமையும் இல்லை . அப்படித்தானே !” சாருவின் குரல்

கேட்டு இருவரும் திரும்பினார்கள்.

“மனோகர் ரொம்ப நல்லவர் டா!” என்றாள் இந்து.

“அக்கா! நீ எதுக்கு வந்திருக்கேன்னு, எனக்கு நல்லா புரியுது. தேவையில்லாமல் எதுவும் ட்ரை பண்ணாத. நான் சொன்னது சொன்னது தான். எனக்கு இப்போ கல்யாணம் வேண்டாம்! அதுவும் உன் குடும்பத்தில் வேண்டவே வேண்டாம். ப்ளீஸ் விட்டுடு” என்று தன் அறைக்கு சென்றாள் சாரு.

வருத்தத்துடன் சென்று தந்தையிடம் அமர்ந்தாள் இந்து. ” நீ ஒன்னும் கவலை படாதே. பக்குவமா சொன்னா அவ புரிஞ்சுப்பா.”

“இல்லைப்பா! நம் விருப்பத்திற்க்காக அவளுக்கு பிடிக்காத விஷயத்தில் அவளை கட்டாய படுத்தற மாதிரி இருக்கு” என்றாள் இந்து.

சிரித்துக்கொண்டே ” தேவையில்லாமல் எதுவும் யோசிக்காதே! அவள் ஏன் மறுக்கிறாள் என்பது இதுவரைக்கும் எனக்கு புரியல.

இப்போ தான் புரிந்தது ”

தந்தையை வியப்புடன் பார்த்தாள் இந்து . “எல்லாம் நான் பாத்துக்குறேன்” என்றார் ரங்கநாதன்.

# 4. பகுதி - 4

சாருமதியின் வெறுப்பு இந்துமதியின் திருமணத்தில் இருந்தே தொடங்கியது .

முப்பது வருடங்களுக்கு முன் மாப்பிள்ளை என்றால் மகாராஜாவைப் போல் நடத்த வேண்டும் என்ற எண்ணம் சமூகத்தில் அதிகமாக இருந்தது. விஜயாவின் வீட்டில் அது ஒரு கட்டாயமான கடமை. சுந்தரம் என்றால் எல்லோருக்கும் பெரும் மரியாதை. அவர் முன் யாரும் அமர மாட்டார்கள். அவரிடம் யாரும் சகஜமாக பேச மாட்டார்கள். அவருக்கு முன் யாரும் உணவருந்த மாட்டார்கள். இவை அனைத்தும் விஜயாவிற்கு பெருமை.

இன்றைய தலைமுறை போல் மாப்பிள்ளையும் என் பிள்ளைபோல் என்று பெண் வீட்டார் நினைக்கக்கூடாது. மாப்பிள்ளைக்கு என்ற கௌரவம் கொடுக்க வேண்டும், தன் கணவருக்கு கிடைத்த மரியாதையைப் போல தன் பிள்ளைகளையும் கொண்டாடும் சாமந்திகள் அமைய வேண்டும் என்று நினைத்தாள்.

இந்துவின் குடும்பத்தாருக்கு தன் மகன் சிம்ம சொப்பனமாக திகழ வேண்டும் என்று நினைத்தாள். இந்து சக்திவேலன் திருமணம் முடிவானதும் பல சட்ட திட்டங்களை வகுத்தாள். எல்லாவற்றையும் ஒன்றாக பறைசாற்ற வில்லை என்றாலும் சமயம் வரும் போதெல்லாம் நிலைநாட்டினாள்.

திருமணத்திற்கான ஆடைகளின் தேர்வில் தொடங்கி , பந்தியில் பரிமாறும் உணவு , திருமண மண்டபம் , என்று எல்லாவற்றையும் அவள் விருப்பம் போல் நடத்தினாள். இன்னும் சொல்லப்போனால் தன் மகனிடம் யார் யார் எப்படி பேச வேண்டும் என்று வகுப்பெடுத்தாள். முக்கியமாக சாருவுக்கு.

அனுபவம் அதிகம் உள்ள ரங்கநாதன் தாமரை , விஜயாவின் எண்ணப்போக்கை கணித்து அதன்படி நடக்க தொடங்கினர். அப்போது கல்லூரி முதலாம் ஆண்டு படித்துக் கொண்டிருந்த சாரு விஜயாவின் எதிர்பார்ப்பை புரிந்து கொள்ள முடியவில்லை.

இந்துவின் திருமண சடங்குகள் வெகுவாக முடிந்து நெருங்கிய உறவினர் சிலர் மட்டும் சூழ்ந்திருக்க இந்து தன் ஒப்பனையை

களைவதற்காக சாருவை அழைத்தாள். அதிகப்படியாக தலையில் இருந்த பூக்களையும் சில நகைகளையும் கழற்றும் படி சொன்னாள் . சாருவும் அவள் சொன்னதை செய்யும் போது பல கொண்டை ஊசிகள் கொண்டு செய்திருந்த அலங்காரத்தை கழற்றுவது சற்றே கடினமாக இருந்தது. பூச்சரத்தை அகற்றும் போது ஒரு கொண்டை ஊசி எங்கோ முடிக்குள் சிக்கொண்டிருந்தது. அது முடியையும் சேர்த்து இழுக்க இந்துவுக்கு சுருக்கென்று வலித்தது.

“ஏய் ! மெதுவா , வலிக்குது”

“பார்த்து சாரு ! மெதுவா செய்” என்றான் சக்திவேலன்.

“ஐயோ !மன்னித்துவிடுங்கள் மாமா , உங்கள் மனைவிக்கு வலி ஏற்படுத்தி விட்டேன்” என்றாள் சாரு.

அங்கிருந்த இளவட்டங்கள் “பாருடா அக்கறையை ! மனைவிக்கு வலித்தால் இவனுக்கும் வலிக்கும்” என்று சிரித்தனர்.

அதற்குள் பின்னலை கலையாமல் பூக்களை சரி செய்வது சற்றே கடினம் என்று உணர்ந்து “மாமா ! என் அக்காவை , இல்லை இல்லை

உங்கள் மனைவியை கொஞ்ச நேரத்துக்கு அழைத்து சொல்லட்டுமா ?" என்றாள் சாரு .

"அவனை கேட்டால் அவன் எப்படி சரி என்பான் . மனைவியை விட்டு பிரிய அவனுக்கு மனம் வருமா ?" என்று மீண்டும் கேலிச் சிரிப்பு .

என்ன சொல்வதென்று தெரியாமல் "ஆளை விடுங்கள்" என்று அங்கிருந்து நகர்ந்தான் சக்திவேலன்.

அவன் சென்றதும் , மணமகள் அறையை நோக்கி இந்துவும் சாருவும் நடந்தனர் .

கோபத்துடன் விஜயா அவர்களை முறைத்துக் கொண்டு இருப்பது தெரியாது அவர்களுக்கு .

பெண்கள் இருவரும் அறைக்கு சென்று மெதுவாக இந்துவின் பின்னலை கழற்றி , ஒப்பனையை சரி செய்து கொண்டிருக்கும் போது , விஜயா உள்ளே வந்தாள் . " எவ்வளவு நேரம் ! உங்களுக்காக எல்லோரும் காத்திருக்க வேண்டுமா ?" என்று சிடு சிடுத்தாள்.

'' இல்லை அத்தை ! இதோ முடிந்தது .'' என்றாள் சாரு .

“எப்போதும் இப்படித்தான் சீவி சிங்காரிக்க நேரம் எடுத்துக்கொள்வாயா ? சட்டுபுட்டுனு தயாராக வேண்டாமா ? என்ன பழக்கம் இதெல்லாம் .உனக்கு நிறைய சொல்லித் தர வேண்டும் போல் இருக்கிறது''.

இந்து சற்றே முகம் வாட , தான் அக்காவை தவறாக எடுத்து விட கூடாது என்று “இல்லை அத்தை ! கல்யாணத்துக்கு செய்த அலங்காரம் என்பதால் கொஞ்சம் லேட் ஆகுது . இல்லையென்றால் அக்கா டக்குனு ரெடி ஆகிடுவா !''

“உன் அக்காவிற்கு நீதான் வாயா ! அவளை கேட்டா நீயே பேசிட்டு இருக்க . உனக்கு கொஞ்சம் வாய் நீளம் தான் . அதை தான் பார்த்தேனே! எல்லோர் முன்னும் இப்படித்தான் பேசுவியா ? கொஞ்சம் கூட மரியாதை இல்லாம என் பிள்ளையை கிண்டல் பண்றே ! என் மகனுக்கு இதெல்லாம் பிடிக்காது . மாமா என்ற மரியாதையுடன் எப்போது நாலடி தள்ளி நின்னு பேசணும் .'' இந்துவை பார்த்து '' உன் தங்கைக்கு இதெல்லாம் நீ தான்

சொல்லணும். நீ கண்டிக்கலைன்னா இவள் எப்படி உன் கணவனை மதிப்பா? எல்லாவற்றிலும் கவனமா இருக்கணும். புரியுதா?''

இந்து தலைகுனிந்து எதுவும் பேசாமல் நின்றாள். சாருவுக்கு வியப்பு. ஏதோ தொலைக்காட்சி தொடர் பார்ப்பதுபோல் இருந்தது. இன்னும் சில பல அறிவுரைகளை இருவருக்கும் பொழிந்து விட்டு அங்கிருந்து நகர்ந்தாள் விஜயா.

சாருவிற்கு இன்னும் வியப்பு மறைய வில்லை. அவள் என்ன தவறு செய்துவிட்டால். அதுவும் தன் அக்காவின் கணவரை மரியாதை குறைவாக என்ன சொல்லிவிட்டாள். இது போன்ற கேலி கிண்டல்கள் எல்லோர் வீட்டிலும் நடப்பது தானே. சகோதரிகள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அப்போது தாமரை அங்கே வர '' வாங்க, மதிய உணவுக்கு நேரம் ஆகிவிட்டது''. மகள்கள் இருவரும் நிற்பதை பார்த்து'' என்ன?'' என்றாள் தாமரை.

''இதோ, இரண்டு நிமிடம்'' என்று இருவரும் அன்னையிடம் எதுவும் சொல்லமால் தயாராகினர்.

அன்று மாலை அன்னையிடம் இதுபற்றி சாரு சொன்ன போது,

அவள் இன்னும் சில புத்திமதிகள் சொன்னாள். "மாமா வீட்டில் கொஞ்சம் பழைய மாதிரி யோசிப்பவர்கள். உன் வாய் துடுக்கை எல்லாம் அவர்கள் முன் கட்டுப்படுத்திக் கொள். அவர்களிடம் அதிகம் வாயாடாதே ! உன் கேலி கிண்டல் எல்லாம் அவர்களிடம் பேசக்கூடாது ! புரிகிறதா ?" என்றாள் தாமரை.

"என்ன அம்மா ! நீயே இப்படி சொல்கிறாய் ?"

"இப்போ நான் என்ன சொல்லிவிட்டேன் ? எல்லோர் வீட்டிலும் பழக்கங்கள் ஒரே மாதிரி இருப்பதில்லை . உன் அப்பா உங்களுக்கு அதிகம் செல்லம் கொடுத்துவிட்டார். ஏன் ? உன் தோழி தேவி , அவள் வீட்டில் அவள் சத்தமாக கூட பேச மாட்டாள் தானே !".

அம்மா சொல்வது சரிதான். அவள் தோழிகள் சிலர் வீட்டில் வெகு கண்டிப்பாக இருப்பார்கள். ஆனால் அக்கா வீட்டார் அப்படி இருப்பது அவளுக்கு பெரும் வருத்தம். அத்துடன் முடியவில்லை.

இந்துவின் திருமணம் முடிந்து இரண்டு மாதங்கள் நிறைவடைந்த சமயம் , ரங்கநாதனுக்கு சற்றே உடல் நலம்

குன்றியது. மூன்று நாட்களுக்கு மேல் ஜுரம். வெகுவாக ஓய்ந்திருந்தார். மருத்துவமனையில் அனுமதிக்க வேண்டியதாயிற்று. ஏதோ மூன்றாவது மனிதர்கள் போல் ஒரு முறை வந்து பார்த்துவிட்டு சென்றான் சக்திவேலன் . இந்துவை அங்கே இருக்க அனுமதிக்கவில்லை. அவ்வப்போது வந்து பார்த்து சென்றாள் . தாமரையும் கணவன் அருகே இருந்ததால் , தன் புகுந்த வீட்டாரை பற்றி சாருவிடம் புலம்பினாள்.

“நீயும் அம்மாவும் அலைந்து கொண்டிருக்கிறீர்கள்! அவரும் ஏதும் உதவி வேண்டுமா என்று கூட கேட்கவில்லை !இங்கே என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. ஒரு நாள் கூட இருந்துவிட்டு வா என்று சொல்லவில்லை . சீக்கிரம் வந்துவிடு என்று தான் சொல்லுகிறார்கள்.”

“விடு அக்கா ! மாமாவுக்கு வேலை அதிகமாக இருக்கும்” என்று அக்காவை தேற்ற முயன்றாள்.

“உனக்கு எக்ஸாம் வேறே நடக்குது . ஒரு நாள் இங்கே இருக்கேன் என்று கேட்டதுக்கு கூட விடவில்லை . நீ வேற வீட்டில்

தனியாக இருக்கிறாய் ?”

வீட்டில் கொஞ்சம் சிக்கலான நேரம் தான். மருத்துவமனையில் ஒருவர் மட்டும் இருக்க வேண்டும் . இரவு சாரு தனியே இருக்க வேண்டும் . அது வேண்டாம் என்பதால் இரவு தாமரை வீட்டிற்குச் சென்று விடுவாள் . காலையில் சாரு வீட்டிற்கு சென்று பின் கல்லூரிக்கு புறப்பட வேண்டும். ஒரு வாரம் தான் என்றாலும் , சற்றே சிரமமாகத்தான் இருந்தது. ஒருவேளை இந்துவோ அவள் கணவனோ உடன் இருந்திருந்தால் சற்றே சௌகரியமாக இருந்திருக்கும்.

இந்து மருத்துவமனையில் இருந்து வீடு செல்லும் போது கணவனை துணைக்கு அழைத்தாள். அப்போது கூட விஜயா , இந்துவை திட்டித் தீர்த்தாள். “ஒரு டாக்ஸி பிடித்து கொள்வதுதானே. இதற்கு எதற்கு அவன் வர வேண்டும் . அவன் என்ன சும்மாவா இருக்கிறான்? புருஷன் மீது கொஞ்சமாவது அக்கரை இருக்க வேண்டும். தினமும் அவன் சாப்பிட்டானா என்று கூட பார்க்காமல் உன் பிறந்த வீட்டிற்கு ஓடுகிறாய். இப்போது அவனை உன்

சௌகரியத்துக்கு வரச்சொல்கிறாய்.” செல்லில் இருந்து பேசிக்கொண்டிருந்த இந்து முகம் வாடியது. அருகில் நின்றிருந்த சாருவுக்கு பெரும்பாலான பேச்சு காதில் விழுந்தது. எதுவும் கேட்காதது போல் “அக்கா! நான் டாக்ஸி பிடித்து வருகிறேன். அம்மாவுக்கு கொஞ்சம் எடுத்து வைக்க உதவி செய்”. என்று விட்டு நகர்ந்தாள்.

அன்று வெகுவாக நொந்து போனாள் சாரு. இனி வரும் நாட்களில் இந்துவின் வீட்டின் உதவியை நாடக் கூடாது என்று நினைத்துக்கொண்டாள். மற்றவர்களிடம் எப்போதும் எதிர்பார்க்க கூடாது என்று ரங்கநாதன் சொல்வதுண்டு . இப்போது இந்துவின் குடும்பத்தாரும் மற்றவர்களாகிப்போனார்கள்.

திருமணம் உறவில் பல எதிர்பார்ப்புகள் இருக்கும் . ஒரு ஆணுக்கும் பெண்ணிற்கும் இடையே இருக்கும் எதிர்பார்ப்புகள் மற்றுமின்றி , இரு குடும்பத்திற்கும் பல எதிர்பார்ப்புகள் இருப்பது இயல்பு . எல்லோரின் எல்லா எதிர்ப்பார்புகளும் ஈடேறிவிடுவதில்லை . சில பல ஏமாற்றங்கள் நிகழ்வது

தவிர்க்க முடியாதது . அந்த ஏமாற்றங்களை பெரிதாக எடுத்துக் கொண்டு திருமணத்தை தவிர்ப்பதோ இல்லை ஏமாற்றங்களில்லாத திருமணத்தை தேடுவதோ புத்திசாலித்தனம் ஆகாது . இப்போது சாரு செய்வதும் இது தான் .

இந்து திருமணம் ஆன புதிதில் அவளுக்கு சக்திவேலிடம் இருந்த சில ஏமாற்றங்களையும் , சக்திவேலின் குடும்பத்தின் மீதிருந்த ஏமாற்றங்களையும் சாருவிடம் சொன்னதுண்டு . அதுவே சாருவிற்கு இந்துவின் புகுந்த வீட்டின் மேல் இருந்த பிரியத்தை குறைத்துவிட்டது . இப்போது அதே வீட்டில் சாரு வாழப்போவது என்றதும் வேண்டாம் என்கிறாள். மகளின் மனோ நிலையை புரிந்து கொண்ட ரங்கநாதன் சாருவிடம் பேசச் சென்றார் .

சாரு தன் அறையில் படுக்கையில் அமர்ந்திருந்தாள். அவளின் முகம், அவளின் அமைதியற்ற நிலையை தெளிவாக பறைசாற்றியது . மெதுவாக மகளின் முன் சென்று நின்றார் . தந்தையை ஒரு முறை நிமிர்ந்து பார்த்துவிட்டு " பிரைன் வாஷ் பண்ண ட்ரை பண்ணாதீங்க அப்பா ". என்றாள் .

“அந்த அளவு எனக்கு திறமை இல்லை.” என்ற படி மகளின் அருகில் அமர்ந்தார்.

”அப்பா கொஞ்சம் பேசுகிறேன் . நீ குறுக்க பேசாம கேள் . அப்புறம் மெதுவா யோசிச்சு பதில் சொல் . எனக்கு தெரிஞ்சு நீ வேற யார் மேலயோ இருக்கிற விருப்பதால் இந்த கல்யாணத்தை வேண்டாம்னு சொல்ல வில்லை . நீ உன் கல்யாணத்துல சில எதிர்பார்ப்புகள் வைத்திருக்கிறாய் . அது தப்புனோ அப்படி எதிர்பார்ப்புகள் இருக்க கூடத்துனோ இங்கே யாரும் சொல்லப்போவது இல்லை. ஆனால் அந்த எதிர்பார்ப்புகள் எல்லாம் கண்டிப்பாக நிறைவேறும்னு யாராலயும் சொல்ல முடியாது . சரியா ? இந்த வரன் வேண்டாம் னு வச்சுக்கலாம் , அடுத்து வருகிற வரன் நீ எதிர்பாக்குற மாதிரி இருக்கும்னு எப்படி உறுதியாக சொல்ல முடியும் ? எல்லா அப்பாக்களுக்கு பெண்ணை கல்யாணம் செய்து கொடுக்கும் போது சில நியாயமான எதிர்பார்ப்புகள் இருக்கும் . நல்ல குணம், நல்ல குடும்பம், நிலையான வருமானம், ஒரு சௌகரியமான வாழ்க்கை . இதில் எதிலும் குறை சொல்ல முடியாதபடி தான் , மாப்பிள்ளை வீடு

இருக்கிறது . இதை தாண்டி எது எப்படி அமையும் என்பது யாராலும் சொல்ல முடியாது . இது என் எண்ணம் .

தந்தையிடம் என்ன சொன்னாலும் ஜெயிப்பது கஷ்டம். அவரிடம் பேசி நாம் நினைப்பதை சாதிப்பது என்பது இதுவரை நடந்ததே இல்லை . மறுக்க முடியாதபடி எல்லா கோணங்களிலும் இருந்து தனக்கு சாதகமான விஷயங்களை பேசி எதிரில் இருப்பவரை வீழ்த்துவது ரங்கநாதனின் பழக்கம் . சாரு இதை நன்கு அறிவாள் . இனி தந்தையிடம் பேச முடியாது . இனி எப்படி மறுப்பு தெரிவிப்பது என்று யோசித்தாள் சாரு.

இந்துமதியின் மனநிலை இன்னும் போராட்டமாக இருந்தது .

இந்துமதிக்கு சக்திவேலனுக்கும் திருமணம் ஆகி நான்கு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது . மனோகரனுக்கு வரன் தேட ஆரம்பித்ததும் முதலில் சாருவைப் பற்றித் தான் எண்ணினார்கள் என்று சொல்வதற்கில்லை . சில இடங்களைப் பார்த்த பிறகு சக்திவேலின் தந்தை சுந்தரம் சாருவைக் கேட்க முடிவெடுத்தார் .இந்த திருமணம் பேச்சு ஆரம்பித்ததிலிருந்து இந்துமதிக்குத்

தான் அதிக சந்தோஷம் . இந்த திருமணம் கூடிவர வேண்டும் என்று அவள் எல்லா கடவுளிடம் வேண்டினாள் . அதற்கு சில காரணங்களும் இருந்தன .இந்துவைத் தேர்வு செய்தது விஜயா இல்லை என்பது விஜயாவின் பேச்சிலிருந்து திருமணமான சில நாட்களில் இந்து தெரிந்து கொண்டாள். பொருளாதார நிலையில் சுந்தரத்தின் குடும்பத்திற்கும் ரங்கநாதன் குடும்பத்திற்கும் பெரிய இடைவெளி இருந்தது . விஜயா அவர்களுக்குச் சமமான நிலையில் பல வரன்களை பார்த்து வைத்திருந்தாள் . இந்துவைப் பார்த்து சக்திவேலுக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. சுந்தரமும் மகனின் விருப்பத்தைப் பெரிதாக எண்ணினார் .

மனோகரனின் திருமணத்திலாவது பெரிய இடத்தில் வரன் வேண்டும் என்று விஜயா முடிவெடுத்தாள் . மனோகரனுக்கு வரன் தேடும் போதெல்லாம் ,விஜயா இந்துவின் பிறந்த வீட்டின் நிலையைக் குறைத்துப் பேசத் தவறியதில்லை. இந்த பேச்சு இந்துவின் தாழ்வு மனப்பான்மையைத் தூண்ட தொடங்கியது .

அப்படி ஒரு நாள் , மனோகருக்கு வரன் தேடத் தொடங்கினர்.

விஜயா அப்போது சொன்ன வார்த்தைகள் இந்துவை வெகுவாக காயப்படுத்தியது.

வீட்டிற்கு வந்த உறவினரிடம் (விஜயாவின் தங்கை முறை) "மனோகருக்கு நல்ல இடமா பார்த்துக்கொண்டிருக்கிறோம். நமது வசதிக்குத் தகுந்த இடமா சொல்லு. மூத்த மருமகளைக் கொண்டு வரும் போது தான் என்னை யாரும் கேட்கவில்லை. இப்போது அப்படி விட்டுக்கொடுக்கமாட்டேன். நல்ல வசதியா, நிறையப் படித்த பெண்ணை பார்க்க வேண்டும். நல்ல திறமைசாலியாக இருக்க வேண்டும். சக்திவேலனுக்கும் நான் அப்படித்தான் பார்க்க வேண்டும் என்று இருந்தேன். அதுக்குள்ள வேற மாதிரி அமைஞ்சிடுச்சு" என்று பெருமூச்சு விட்டாள் விஜயா.

விஜயா சொன்ன பட்டியலில் பண வசதி என்ற ஒன்றைத் தவிர மற்ற எதிலும் இந்து குறைந்தவளில்லை. ஆனால் பலமுறை தன் திறமையையும் அறிவையும் விஜயா குறைத்துப் பேசுவதைக் கேட்டதால் இந்துவிற்கு தன் மேல் சந்தேகம் வரத் தொடங்கியது.

அப்போது அங்கிருந்த உறவினர் இந்துவை ஒரு முறை

ஏளனமாகப் பார்த்துவிட்டு ,"நம் மனோகருக்கு எல்லாம் சிறப்பாக அமையும். எனக்குத் தெரிந்த ஒரு இடம் இருக்கிறது . ஒரே மகள் , பெரிய வசதியான குடும்பம் , நிறையப் படித்து இருக்கிறாள் . வெளிநாடு எல்லாம் சென்று வந்திருக்கிறாள் . இப்போது அவளுக்கு மாப்பிள்ளை பார்ப்பதாகச் சொன்னார்கள் . விசாரித்துச் சொல்கிறேன்" என்று விடைபெற்றுச் சென்றார்.

இந்துவுக்கு உள்ளே பெரும் கலக்கம் . இப்போதே அவளைப் பலவாறு குறை சொல்வது விஜயாவின் வழக்கம் . இன்னும் ஒரு மருமகள் அதுவும் விஜயாவுக்குப் பிடித்தது போல் அமைந்து விட்டால் இன்னும் என்னவெல்லாம் சொல்வார்களோ ? திரைப்படங்களில் வருவது போல் அவளை ஒரு கிள்ளுக்கீரையாக

நினைக்கலாம். "எனக்கு இது பிடிக்கும்" என்று சொல்லும் தைரியம் கூட அவளுக்கு இருந்ததில்லை . இப்போதே மற்றவள் சொல்வதை செய்யும் பொம்மையாக தான் அவள் இருக்கிறாள்.

இப்படியாக அவள் பயந்து கொண்டிருந்த நிலையில் சாருவை மனோகருக்கு கேட்டது அவளுக்கு தெய்வ செயலாக இருந்தது.

அவள் தங்கையும் அவளும் ஒரே வீட்டில். மீண்டும் பிறந்த வீட்டில் இருந்த உற்சாகம் கிடைக்கும் என்று வெகுவாக சந்தோஷப்பட்டாள். ஆனால் தங்கையோ இப்படி ஒரு குண்டை போட்டு விட்டாள்.

தந்தை தங்கையிடம் பேசிவிட்டு வந்ததும், இந்து சாருவிடம் சென்றாள்.

“சாரு, ரொம்ப சாரி. இந்த கல்யாணம் நடந்தால் எனக்கு என்ன என்ன நன்மைகள் என்று யோசித்தேனே தவிர உனக்கு வரும் சங்கடங்கள் பற்றி யோசிக்கவே இல்லை. உனக்கு பிடிக்கவில்லை என்றால் இந்த கல்யாணம் வேண்டாம்.” என்றாள் இந்து.

“உனக்கு வரன் வந்த போது, உனக்கு பிடித்ததா ? என்று கேட்டார்கள். இப்போது என் விஷயத்துல”உனக்கு பிடித்துத்தான் ஆக வேண்டும்” என்கிறார்கள் ”என்றாள் சாரு.

சற்றே தயக்கத்துடன் “நீ யாரையாவது லவ் பண்றியா ?” என்றாள் இந்து.

தமக்கையை முறைத்து பார்த்துவிட்டு ,” நீ புதுசா கற்பனை

செய்யாதே " என்றாள் சாரு.

"நான் சொல்வதை கேள். நீ என்னைப்போல் இருக்க வேண்டியதில்லை. இன்னும் சொல்லப்போனால் , திருமணத்திற்கு பிறகு நீ மும்பையில் இருக்கப் போகிறாய். விடுமுறைக்கு தானே இங்கே வருவீர்கள். அதனால் பெரிய பிரச்சனை எதுவும் இல்லை"

"அது மட்டும் இல்லை மனோகர் இங்கே வர திட்டமிடுவதாக உன் மாமா சொல்லுகிறார் .நான் எங்கே வாழப் போகிறேன் என்பது முக்கியமில்லை. உன் அத்தை நான் எங்கு இருந்தாலும், அவர்கள் சொல்லும்படி தான் இருக்க வேண்டும் என்று நினைப்பார்கள் ."

"அம்மா சொன்னால் கேட்பாய் இல்லையா ? அது போல நினைத்துக் கொள்"

ஒரு ஏளன சிரிப்புடன் " அம்மா நம்மை மகளாக பார்க்கிறார் . உன் அத்தை நம்மை மருமகளாக கூட பார்க்க மாட்டார். அவரை பொறுத்தவரை நாம் அடிமைகள். நாம் மட்டும் இல்லை நம் அம்மா அப்பா கூட ".

# 5. பகுதி - 5

மனோகர் குடும்பத்தின் தொழிலை ஏற்காமல் இருந்தது சுந்தரத்திற்கு வருத்தமே. தொழிலில் இரண்டு மாதங்களில் ஈட்டும் லாபம் மனோகர் ஆண்டு வருமானம். சுந்தரத்திற்கு இருந்தது அனுபவ ஞானம் . சக்திவேலன் படித்தது வணிகம். அவர்கள் தொழில் முறை படிப்பை மனோகர் தேர்ந்தெடுத்த போது குடும்பத்தில் அனைவரும் மகிழ்ச்சி அடைந்தனர். ஆனால் இறுதி ஆண்டில் அவன் ஒரு பன்னாட்டு நிறுவன வேலையை சம்பாதித்திருந்தான் . அது பெரிய இயந்திரங்கள் தயாரிக்கும் நிறுவனம். சம்பளம் பெரிய அளவில் இல்லை. ஆனால் பிடிவாதமாக அந்த வேலைக்கு செல்லத் தீர்மானித்து விட்டான். முதலாம் ஆண்டு அடிப்படை பொறியாளன் என்ற நிலையில் இருந்தான் . அவன் செய்த வடிவமைப்புகள் எல்லோராலும் பாராட்டப்பட்டது. அடுத்த ஆண்டே அவனுக்கு பெரும் ஊதிய உயர்வும் , பதவி உயர்வும் கிடைத்தது.

அவன் வளர்ச்சி யாரும் எதிர்பாராத வண்ணம் இருந்தது.

வெளிநாட்டு பயணங்கள் செய்ய நேர்ந்தது. முதலில் மகன் இப்படி அலைகிறான் என்ற கவலை இருந்தாலும், பிறகு அவன் வளர்ச்சி நூற்றில் ஒருவர் அடைவதே அபூர்வம் என்று அறிந்து மகிழ்ந்தனர் சுந்தரம் தம்பதியினர். வருடத்தில் மூன்று நான்கு முறை வெளிநாட்டு பயணம் என்று சுற்றுவான். அப்படி இருந்த நேரத்தில் தான் சக்திவேலுக்கு திருமணம் முடிவானது. ஒரு முறை மனோகரன் ஊருக்கு வந்தபோது , அண்ணனுக்கு வரன் பார்ப்பதாக தெரிந்தது. அவன் ஒரு மாதம் ஜெர்மனி செல்லவேண்டியிருந்தது . அவன் புறப்பட்ட ஒரு வாரத்தில் திருமணம் முடிவாகிவிட்டதாக பெற்றோர் கூறினர்.

வேலைகளை சீக்கிரமாக முடித்துவிட்டு , அண்ணன் திருமணத்தில் உதவி செய்யலாம் என்று என்னும் போது , மீண்டும் வேறு பொறுப்பை ஒப்படைத்தார்கள். ஒரு வழியாக திருமணத்தின் முன் தினம் தான் ஊருக்கு வந்து சேர்த்தான்.

சக்திவேலன் திருமணத்தன்று இவர்கள் குடும்பத்தை

வரவேற்க பெண் வீட்டார் அதாவது இந்து பெற்றோர் மண்டபத்தில் இருந்தனர். அப்போது அறிமுகப்படுத்தி வைத்தார். அப்போதுதான் மணப்பெண்ணும் உடன் சில பெண்மணிகளும் ஒரு வேனில் வந்திறங்கினார். அது எட்டு பேர் அமரக்கூடிய வாகனம். பின்புறம் இருந்த இருக்கைக்கு செல்லவும் வெளியே வரவும் முன்புறம் இருக்கும் இருக்கைகளை மடக்க வேண்டும். பின்புறம் இருந்த சீட்டில் அமர்ந்திருந்த ஒரு சிறு பெண் இறங்கும் முன் இருபுறமும் கதவை அடைத்துவிட்டனர். அந்த பெண் உள்ளிருந்தபடி தட்டிக்கொண்டிருந்தாள்.

அதற்குள் மணப்பெண்ணுக்கு ஆரத்தி எடுக்க வந்துவிட்டனர். இதை கவனித்துக் கொண்டிருந்த மனோகர் வண்டியின் அருகில் செல்ல , மற்றொருபுறம் வேறு யாரோ அந்த பெண்ணிற்காக கதவை திறந்து விட்டார்கள் . கையில் மாலைகள் பூச்சரம் என்று வைத்திருந்த தட்டுகளுடன் அவள் இறங்க , அவள் சிறு பெண் ஒன்றும் இல்லை. அந்த வாகனத்தின் உயரத்திற்கு மேல் அவள் சிரம் தெரிந்தது.

” பார் இந்த அக்காவை ! கல்யாணம் என்றதும் தங்கையை மறந்துட்டா ! மாப்பிள்ளை என்ன இவளை விட்டுட்டு ஓடிய போயிடுவாரு ” என்று கூறியபடி மாலைத்தட்டுகளை எடுத்து சென்றாள். அவள் இறங்கினாளா என்பதை இதுவரை யாரும் கவனிக்கவேயில்லை . “ஒருத்தருக்காவது என் மேல அக்கரை இருக்கா ?” என்று புலம்பியவாறு சென்றாள்.

மனோகரும் பின்தொடர்ந்தான் .

கையில் இருந்த தட்டுகளை வாங்கிக்கொண்டு “இவள் என் இளைய மகள் சாருமதி” என்றாள் தாமரை.

தன்னை யாருக்கு அறிமுகம் செய்துவைக்கிறார் என்று பார்க்க திரும்பினாள் சாருமதி . அவள் யோசிப்பது புரிந்ததும் .

“மனோகர் , சக்திவேலின் தம்பி” என்று கை குவித்தான் .

பதிலுக்கு அவளும் கைகுவித்தாள் . அதற்கு மேல் அவள் நிற்கவில்லை.

மணமகன் அறையில் சக்திவேலின் தயாராகி அமர்ந்திருந்தான்.

எல்லோரும் கேலியும் சிரிப்புமாய் எதோ பேசிக் கொண்டிருந்த போது , சட்டென்று யாரோ சொன்னார்கள், ” உன் மாமனார் விலாசம் இருந்தால் கொடு ”, என்றான் ஒருவன் .

“உனக்கு எதுக்கு” என்றான் இன்னொருவன்.

“இப்போது தான் இவன் மச்சினிச்சியை பார்த்தேன் ! ரொம்ப அழகு ! பேசாமல் இவன் மாமனாரிடம் பெண் கேட்டுவிடலாம் என்று தான் !”

அப்போது தான் மனோகர் உள்ளே நுழைந்தான் . “உனக்கு வாய்ப்புகள் குறைவு தான். இதோ உனக்கு போட்டி” என்று ஒருவன் மனோகரை காண்பித்தான்.

புரியாமல் “நான் யாருக்கு போட்டி ?” என்றான் மனோகர் .

“இதோ இவனுக்கு தான் . நீ இருக்க மணப்பெண்ணின் தங்கைக்கு இவன் ஜோடியாக முடியுமா” என்றான் முதலில் பேசியவன்.

என்ன ? என்று ஒரு கணம் ஆச்சரியப்பட்டாலும் , மனம்

உற்சாகத்தில் துள்ளியது. அதற்குள் " போதும் இந்த பேச்சு . அவள் இன்னும் சிறு பெண் . பள்ளியில் தான் படிக்கிறாள் . நீங்கள் யாராவது தொந்தரவு செய்தால் , மைனர் பெண்ணை சீண்டியதற்கு தக்க தண்டனை கிடைக்கும் . ஜாக்கிரதை !" என்றான் சக்திவேலன் .

"ஐயோ ! தெரியாமல் பேசிவிட்டோம் . விட்டால் மாப்பிள்ளையே நம்மை போலீசில் மாட்டிவிடுவான்" என்று பேசிக்கொண்டிருந்தபோது , விஜயா வந்து " நேரமாகிறது ! மேடைக்கு வா " என்று சக்திவேலை அழைத்து சென்றாள் .

"இவர்களுக்கு எல்லாம் குடிக்க ஏதாவது கொடு மனோ" என்று இளைய மகனை பணித்துவிட்டு சென்றாள்.

"இதோ வருகிறேன்" என்று அவன் செல்லுமுன், "மனோ ! நோ பார்மாலிட்டிஸ் . இப்போது எதுவும் வேண்டாம் . நாங்களும் வருகிறோம் என்று அவனுடன் நடந்தனர் . அவர்களாக பின் வரிசையில் அமர , குளிபானம் எடுத்துவர மனோகர் சென்றான் .

அப்போது அவன் நினைவில் முழுக்க சாருமதி தான் நிறைந்திருந்தாள். ஆனால் சக்திவேல் சொன்னது போல் அவள்

சிறு பெண் என்று தன் எண்ணங்களுக்கு ஒரு குட்டு வைத்தான்.

சிலமுறை சாரு கடந்து செல்வதை , பேசுவதை கவனித்தான் . அவள் பேச்சு அப்படி ஒன்றும் சிறுபிள்ளைகள் போல் இல்லை . பக்குவம் நிதானம் எல்லாம் அவளிடம் இருந்தது . ஆனால் வயதுக்கும் பக்குவத்திற்கும் சம்மதம் இல்லையே. திருமணத்தன்று முகூர்த்தைதை மட்டும் பார்த்துவிட்டு உறங்கிப்போனேன் மனோகரன். நேர மாற்றம் ,பிரயாண களைப்பு இன்னும் அவனுக்கு தீரவில்லை. எவ்வளவு நேரம் உறங்கினானோ தெரியாது . அறையில் ஏதோ பேச்சுக்குரல் . லேசாக தூக்கம் கலைந்தது . கண்விழித்து பார்த்தான். விஜயா தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்தார்.

“இந்த காலத்து பொண்ணுகளுக்கு கொஞ்சம் கூட மரியாதை தெரியவில்லை ! எல்லாம் என் நேரம் !”

“என்னம்மா, புலம்பல் !”

“ஐயோ ! நான் பேசி உன்னை எழுப்பிட்டேனா !நீ இன்னும் கொஞ்ச நேரம் தூங்கு” என்றாள்.

மணியை பார்த்துவிட்டு , எழுந்து அமர்ந்தான். ''என்ன ஆச்சு மா''

''எல்லாம் இந்த சாரு தான்''

தன் கை கடிகாரத்தை சரி செய்து கொண்டிருந்தவன் , தனக்குள் இருந்த ஆர்வத்தை அடக்கிக்கொண்டான் . அன்னை தொடரட்டும் என்று எதுவும் பேசாமல் காத்திருந்தான் . ''உன் அண்ணனை கேலி செய்கிறாள் . கொஞ்சமாவது பயம் வேண்டாம் ! அக்காவின் கணவன் என்ற மரியாதை வேண்டாம் . அது தான் நல்லா திருப்பி கொடுத்துவிட்டு வந்தேன்''

''அம்மா , அவள் மாமாவை அவள் கேலி செய்கிறாள் . இது எல்லாம் சகஜம் .''

''நீ சும்மா இரு ! உனக்கு ஒன்று தெரியாது . அந்த காலத்தில் நாங்கள் எல்லாம் ஆண்கள் முன் தலை நிமிர்ந்து கூட பேச மாட்டோம் . என்ன வாய் தெரியுமா அவளுக்கு .''

''சின்ன பெண் . விளையாட்டாய் பேசியதை பெரிதாக

எடுத்துக் கொள்ளாதீர்கள் அம்மா”.

” என்ன சின்ன பெண் ,பனை மரம் மாதிரி வளர்த்திருக்கிறாள் . இதுகூட தெரியாதா .”

“அம்மா இந்த காலத்தில் பெண்கள் இப்படித்தான் இருப்பார்கள்.” விஜயா விடுவதாக இல்லை . தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள் .

இவன் மெதுவாக அங்கிருந்து நகர்ந்தான். அதன் பின் சாருவை பார்க்கும் சந்தர்ப்பம் வரவில்லை . ஆனால் அவன் மனதில் அவள் நிறைந்திருந்தாள்.

சில மாதங்களுக்கு முன் விடுமுறையில் வீடு வந்திருந்த மகனிடம் விஜயா பேசினாள் .

“மனோ , என்னப்பா லீவ் அன்றும் வேலை செய்கிறாய் . கொஞ்சம் ஒய்வு எடுக்கக்கூடாதா? அந்த கம்ப்யூட்டர்-ஐ முடித்தான் வை” என்றாள் .

” ஒரு பத்து நிமிஷம் . முடிந்துவிடும் ”

“நான் ஒன்று பேச வேண்டும்”

” சொல்லுங்க மா ”

“இப்படி எல்லாம் பேச முடியாது . முக்கியமான விஷயம் . நீ வேலையை முடி” என்று மகனிடம் அமர்ந்தாள் .

அன்னையை காக்க வைக்க மனம் இல்லாமல் தன் லேப்டாப்-ஐ மூடிவைத்துவிட்டு ” இப்போ சொல்லுங்க” என்றான் .

” பெண் பெயர் சுமா. சென்னையில் வேலை செய்கிறாள் . எம் பி ஏ படித்திருக்கிறாள் . பெண்ணும் பார்க்க நல்ல அழகு . இதோ போட்டோ கூட இருக்கு ” என்று ஒரு புகைப்படத்தைகாண்பித்தாள் .

திருமண பேச்சை அன்னை எடுத்த போது முதலில் நினைவுக்கு வந்தது சாரு தான். ஆனால் அம்மா சுமா என்று வேறேதோ பெயரை சொல்லவும் அவனுக்கு ஆர்வம் இருக்கவில்லை . சாரு இப்போது என்ன செய்து கொண்டிருப்பாள் என்று எண்ணம் அவ்வப்போது வரும். அவள் படிப்பு முடிந்திருக்குமா ? மேலே

படிக்க வேண்டும் என்று திட்டம் வைத்திருக்கிறாளா ? என்று யோசிப்பான். இருவரும் அன்னியர்கள் இல்லை என்பதால் அவளை பற்றிய பேச்சு அவ்வப்போது வீட்டில் கேட்கும் . அண்ணி இந்து அவளைப்பற்றி பேசுவாள். அவள் பேசியதில் ஓரளவு சாருவை பற்றி அறிந்து கொண்டான் . அவள் அப்படி ஒன்றும் தங்கை புராணம் பாடிவிட்டு வில்லை .

மருமகளை குறை கூற , விஜயா , இந்துவின் குடும்பத்தார் அனைவரையும் குறை கூறுவாள். உடனே இந்து மறுத்துப் பேசவில்லை என்றாலும் , பக்குவமாக அவர்களின் குணங்களை சொல்வாள்.

விஜயாவுக்கு இந்துவின் குடும்பத்தை பெரிதாக பிடித்து விட வில்லை . இப்போது இளைய மகனும் அந்த வீட்டு பெண்ணை மணக்க சம்மதிப்பாளா ? அவ்வப்போது மனோகர் யோசித்ததுண்டு

மனோகரன் புகைப்படத்தை பார்க்கவில்லை என்பது நிச்சயம் . '' அம்மா ! இன்னும் கொஞ்ச நாள் போகட்டும் என்று சொன்னேனே '' என்று விட்டு மீண்டும் தன் லேப்டாப்பை திறந்தான் .

" என்னப்பா ! போட்டோவை பார்க்காமலே சொல்கிறாய் . பார்த்தால் உனக்கு பிடிக்கும் ."

"போட்டோ பார்த்து எனக்கு மனசு மாறப்போவது இல்லை . இன்னும் ஒரு ஆறு மாதம் பொறுங்கள் ."

"எதற்கு ஆறு மாதம் ?"

"அம்மா , இப்போ என் வேலையை பற்றி உங்களுக்கே தெரியும் . மாதத்தில் பத்து நாளேனும் வெளியே சுற்ற வேண்டும் . கொஞ்சம் வேலை பளுவும் அதிகம் . இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் இந்த சுற்றல் வேலை குறைத்துவிடும் . சென்னைக்கு மாற்றலும் கிடைத்து விடும் . பிறகு எல்லாம் பேசிக்கொள்ளலாம் ."

" நல்ல கதை தான் ! வேலை எப்போதும் இருந்துகொண்டே தான் இருக்கும் . மாற்றல் கிடைக்கும் போது கிடைக்கட்டும் . கல்யாணம் என்றால் உடனேவா நடக்கும் ? மூன்று மாதங்களேனும் வேண்டும் . கல்யாணம் கூட ஆறு மத்திக்கு பிறகு வைத்துக் கொள்ளலாம் . சரிதானே !"

" அம்மா ப்ளீஸ் இப்போது வேண்டாம் " என்றான். மகனின் குரலில் கோபம் தெரிந்தது.

இன்னும் பேசி கோபத்தை அதிகப்படுத்தும் விடக்கூடாது என்று அங்கிருந்து நகர்ந்தாள். இது நடந்து மூன்று மாதங்கள் கூட இருக்காது.

சென்ற முறை அவன் வந்தபோது கூட திருமணம் பற்றி பேசாமல், வேலை இட மாற்றம் பற்றி கேட்டாள் விஜயா.

" தெரியவில்லை " என்று விட்டான்.

இன்று மட்டும் மகன் ஒப்புக்கொள்ளவா போகிறான் என்று எண்ணியிருந்தாள்.

மகன் வீடு திரும்பி இருக்க கூடும் என்று கணித்து மனோகருக்கு அழைத்தார் சுந்தரம். தந்தை, சாருவை மணக்க சம்மதமா? என்றதும், ஒரு கணம் எதுவும் பேசாமல் நின்றான். தந்தை மறுமுறை கேட்டதும், தான் சந்தோஷத்தை பெரிதாக காட்டிக்கொள்ளாமல் "உங்கள் விருப்பம் என்றான்". ஒருவேளை நேரில் இதுபற்றி பேசி

இருந்தால் அவன் முகமே அவன் சம்மதத்தை எல்லோருக்கும் தெரியப்படுத்தி இருக்கும் .ஆனால் சாருவை பற்றி பேசியதும் உடனே திருமணத்திற்கு சம்மதம் தெரிவித்தான் மனோகர்.

ஒரு வேலை தந்தை கேட்டதனால் ஒப்புக்கொண்டானா? என்ற சந்தேகம் விஜயாவிற்கு வந்தது.

மனோகரன் எப்போதும் அப்படித்தான் . தாயிடம் எல்லா விஷயங்களிலும் வாதம் செய்வான் . அதே தந்தையிடம் எல்லாவற்றிற்கும் 'சரி' என்று விடுவான் . தந்தையிடம் பயம் என்று இல்லை . அவர்கள் இருவருக்கும் நல்ல புரிதல் இருப்பது விஜயாவுக்கும் தெரியும் . ஒரு வேலை சுமாவை பற்றி தந்தை சொல்லிருந்தால் சம்மதம் தெரிவித்திருப்பனோ ? என்ற சந்தேகம் தோன்றியது.

விஜயாவிற்கு சுமாவை பிடித்த அளவு சாருவை பிடிக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும் . சுமா வசதியான வீட்டில் ஒரே மகள். நல்ல படிப்பு , அழகு . சுமா தான் மருமகளாக வரவேண்டும் என்று எண்ணினாள் . ஆனால் மகனின் விருப்பம்

வேறாக இருக்கவும் சற்றே ஏமாற்றம் அடைந்தாள் விஜயா.

# 6. பகுதி - 6

எல்லோரும் சேர்ந்து சாருமதியை சம்மதிக்க வைத்து விட்டார்கள்.

அனைவரும் பேசி முடிக்கவும் சக்திவேல் தொலைபேசியில் அழைக்கவும் சரியாக இருந்தது .மனோகர் சம்மதம் தெரிவித்து விட்டதை சொன்னான் .சாருவுக்கு ஒரு சிறு நம்பிக்கை இருந்தது. மனோகருக்கு சாருவை பிடிக்கவில்லை என்றால் ! இப்போது அந்த நம்பிக்கையும் உடைந்துவிட்டது . இவளை பற்றி அவனுக்கு என்ன தெரியும் . ஒரு வேளை இந்துவைப் போல் சாருவும் இருப்பாள் என்று நினைத்துவிட்டானோ? சாருவுக்கு பல கேள்விகள் .

சாருவுக்கு மட்டும் மனோகரை பற்றி என்ன தெரியும். இவள் குடும்பத்தில் இந்துவின் திருமண நாள் வரை யாரும் மனோகரை பார்த்திருக்கவில்லை. வெளிநாட்டில் ஏதோ வேலை என்று திருமணத்திற்கு முன் தினம் தான் வந்திருந்தான். பயண களைப்பு என்று முக்கிய சடங்குகள் தவிர அதிகம் அவர் தென்படவில்லை.

பிறகு ஒருமுறை இந்துவை பார்க்க அவன் வீட்டுக்கு போன போது சந்தித்து இருந்தாள் . பொதுவான நலம் விசாரிப்பு தவிர எதுவும் பேசவில்லை இருவரும்.

திருமணத்திற்கு முன் நேரில் சாருவுடன் பேச நினைத்தான். அதற்கான சந்தர்ப்பம் சரியாக அமையவில்லை . தொலைபேசியில் பேச நினைத்தான் . ஒரு முறை அவள் வீட்டில் இருக்க வில்லை. அவளின் செல் எண்ணும் அவனிடம் இல்லை. இரண்டாவது முறை ரங்கநாதன் அவராக மக்களிடம் கொடுத்தார் .

"ஹலோ"

"எப்படி இருக்கே சாரு ?"

"நல்லா இருக்கிறேன் ! நீங்க?"

அதற்கு மேல் இருவருக்கும் என்ன பேசவேண்டும் என்று தெரியவில்லை . அவன் மீண்டும் ஆரம்பிக்கும் முன் "ஒன்றுமில்லை என்றால் வைக்கட்டுமா ?" என்றாள் சாரு.

அதற்குள் ரங்கநாதன் "நான் மாப்பிள்ளையிடம் பேச

வேண்டும் அம்மா ! நீ பேசியதும் கொடு" என்று அவளிடம் கூறுவது அவனுக்குக் கேட்டது . அடுத்த கணம் ரங்கநாதன் குரல் கேட்டது " மாப்பிள்ளை ! உங்களுடைய ஆடைகள் தேர்வு பற்றிப் பேசலாம் என்று நினைத்தேன். முகூர்த்த ஆடைகள் பட்டு வேஷ்டி . உங்கள் அளவு பெரிய மாப்பிள்ளை சொன்னார் . அதன் படி இங்கேயே எடுத்து விடவா இல்லை. நீங்கள் வந்து தேர்வு செய்து கொள்வீர்களா ? "

"நானே தேர்வு செய்து கொள்கிறேன் ! உங்களுக்குச் சிரமம் வேண்டாம்"

இப்படியாக ஒரு ஐந்து நிமிடம் பேசிவிட்டு வைத்தான்.

சாரு அவனுடன் அதிகம் பேசாதது மட்டுமில்லை , அவளுக்கு ஆர்வமும் இல்லை என்று ஒரு எண்ணம் தோன்றியது . மீண்டும் அப்படி ஒன்றும் இருக்காது, பெற்றோர் அருகில் இருக்கும் போது அவளுக்குத் தயக்கம் இருந்திருக்கும் என்று தன்னை சமாதானப்படுத்திக் கொண்டான்.

திருமணத்திற்கு சில நாட்களே இருக்க வேலைகளை முடித்துத்

தர வேண்டும் . அப்போது தான் அவனின் ஊர் மாற்றத்திற்கான விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படும் . இப்படியாக நாட்கள் ஓடிவிட்டது . இதோ திருமண நாளும் வந்துவிட்டது .

எல்லா நிகழ்வுகளும் ஒரு முறை கண் முன் ஓடியது சாருவுக்கு. இதோ விடிந்தால் திருமணம் . இருவீட்டாரும் மிக நெருங்கியவர் எல்லோரும் மண்டபத்தில் கூடியிருந்தனர். கேலி கிண்டல் என்று எல்லாரும் உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தனர். சாரு மணப்பெண் அறையிலேயே இருந்தாள். அவளுடன் இந்துவும் அவள் மகனும் அகிலன் இருந்தனர். அகிலன் சாருவின் கையில் வரைந்திருந்த மருதாணியைப் பார்க்க வளையல்களை முன்னும் பின்னும் தள்ளி விளையாடிக்கொண்டிருந்தான். அவனைப் பார்த்தவாறு அமர்ந்திருந்த இந்து , " சாரு , இப்படி இருக்காதே. எனக்கு ரொம்ப கஷ்டமா இருக்கிறது. நீயா ஒரு கற்பனை செய்து அப்படி தான் நிஜமும் இருக்குமென்று நம்பிக்கொண்டு இருக்கிறாய் . கொஞ்சம் உன் கற்பனை எல்லாம் மூட்டை கட்டி வை. எல்லாம் நல்ல விதமாக அமையும் "

சாரு இந்துவைப் பார்த்தாள்.

இந்துவின் முகத்திலும் ஒரு சோர்வு . வேலையால் வந்தது இல்லை. தங்கையை நினைத்து வந்த சோர்வு. தன்னால் அவள் வருத்தக்கூடாது என்று நினைத்து ,"அதெல்லாம் ஒன்றும் இல்லை , லேசா தலை வலிக்கிறது ."

"ஐயோ ! நான் ஏதும் மாத்திரை தரட்டுமா ? இல்லை தைலம் எடுத்து வரவா" என்று பரபரத்தாள் இந்து.

"எதுவும் வேண்டாம் ! நான் படுக்கிறேன்" என்று படுக்கச் சென்றாள்.

"நீ படுத்துக்கொள்ள ! நான் கொஞ்சம் தைலம் எடுத்துத் தேய்த்து விடுகிறேன்" என்று அருகில் அமர்ந்து சாருவின் நெற்றியை வருடியவாறு அமர்ந்திருந்தாள்.

இந்துவை நினைக்கப் பாவமாய் இருந்தது . சாரு இல்லாமல் வேறு பெண் அவர்கள் வீட்டிற்கு வந்திருந்தால், இன்னும் என்னென்ன கஷ்டங்களை சந்தித்திருப்பாளோ ? தங்கையே

வருகிறாள் என்று சந்தோசப்படமுடியாமல் சாருவும் முகத்தைத் தூக்கி வைத்திருந்தாள். சாரு நாளையேனும் உற்சாகத்துடன் இருக்க வேண்டும் . அப்படி நடிக்கவாவது செய்யவேண்டும் என்று முடிவெடுத்தாள். பெரிதாக உறக்கம் வரவில்லை. அவள் அருகில் அகிலனும் இந்துவும் அப்படியே உறங்கிப்போனார்கள். சாரு சத்தமின்றி சிறிது நேரம் விசும்பினாள் . யாருக்கேனும் அழுகை சத்தம் கேட்டால் என்ன நினைப்பார்கள் ! வெகுவாக முயற்சித்து அழுகையை அடக்கினாள். வெகு நேரத்திற்குப் பிறகு உறங்கினாள் .

காலை எழுந்த பின் அவளுக்கு வேறெதுவும் யோசிக்க நேரம் இருக்கவில்லை . வெகுவாக முயற்சித்து முகத்தை மகிழ்ச்சியாக வைத்துக் கொண்டாள். திருமணம் முடிந்து தம்பதிகளாய் முதல் முறை மனோகரனுடன் வீட்டிற்குள் செல்லும் போது ஏதோ பெரும் பயம் அவளை ஆட்கொண்டது. விளக்கேற்றி பால் காய்ச்சிய பிறகு , சிறிது நேரம் ஒரு பெரும் கூட்டம் அவளைச் சுற்றி நின்றது. அறிமுக படலம் . திருமண வரவேற்பில் பார்த்த பலரை மீண்டும் அறிமுகம் செய்து வைத்தார் விஜயா.

அப்போது அங்கு வந்த இந்து, சாருவின் நாத்தனார் சுதா " பார்த்தீர்களா ! இந்துவின் சாமர்த்தியத்தை . எல்லோரும் அவள் வாயில்லா பூச்சி என்பீர்கள் . இப்போது அவள் தங்கையை இணை சகோதரியாகக் கொண்டு வந்து விட்டாள் ." என்றாள்.

இது என்ன? தேவையில்லாமல் இப்போது ஏன் இந்துவை இதில் இழுக்க வேண்டும் . இது பெரியவர்கள் பார்த்து நடந்த திருமணம் . ஏதோ இந்து திட்டம் போட்டுச் செய்ததுபோல் என்ன பேச்சு ! சாரு எதுவும் பேசாமல் இருக்க வேண்டும் என்று தன்னை வெகுவாக கட்டுப்படுத்திக் கொண்டிருந்தாள்.

அப்போது யாரோ ஒரு பெண்மணி , சுதாவிற்கு அத்தை முறையாக இருக்க வேண்டும் . "எங்கள் பெண்ணை இப்படிச் சொல்லக்கூடாது . உன் தம்பி விருப்பப்படாமலா கல்யாணம் நடந்தது. அக்கா தங்கை இருவரைப் பார்த்து உன் தம்பிகள் இருவரும் மயங்கி விட்டார்கள் என்று சொல்" என்றாள் .

சட்டென்று விஜயா , "என் பிள்ளைகள் , நான் சொன்னதை அப்படியே கேட்பார்கள் . பெண்ணின் போட்டோ கூட பார்க்க

வில்லை தெரியுமா?" என்றாள்.

"போட்டோ எதற்கு ! அதுதான் அண்ணன் திருமணத்திலேயே நேரில் பார்த்து விட்டானே"

"என் பிள்ளைகள் பெற்றோர் சொன்னதற்காகத் தான் , திருமணம் செய்தார்கள்" என்றாள் கோபத்துடன்.

"விஜயா ! நீ ஏன் கடுகாய் பொறிகிறாய் . சுதா இந்துவின் மேல் சொன்னாள் , அதை நாங்கள் உன் பிள்ளைகள் மேல் திருப்பிவிட்டோம். எப்படியோ, உனக்கு இரண்டு மருமகள்களும் சிறப்பாக அமைந்திருக்கிறார்கள்". என்றாள்.

மெதுவாக உணவருந்த எல்லோரும் களைந்து செல்ல , "அவளுக்கு அவள் அறையை காட்டு" என்று பணித்து விட்டு விஜயாவும் நகர்ந்தாள். தங்கையை அழைத்து சென்றாள் இந்து.

அந்த வீடு இரு தளங்களை கொண்டிருந்தது. கீழே பெரிய ஹால், சமையலறை, டைனிங் ஹால் அதுமட்டுமின்றி நான்கைந்து கதவுகள் தெரிந்தது . இந்து இங்கே வந்து சில ஆண்டுகள் ஆன

போதிலும் முன்பு சொன்ன மூன்று அறைகளை தவிர சாருவுக்கு அந்த வீட்டின் அமைப்பு தெரியாது . சாருவின் அரை மேல் தளத்தில் இருந்தது . மேலே மூன்று கதவுகள் .அவற்றை இணைக்க ஒரு சிறிய வராண்டா . அந்த வராண்டாவில் நின்று கீழே பார்த்தால் கீழ் தளத்தின் பாதி தெரியும்.

எந்த அறை யாருடையது என்று சொல்லிக் கொண்டிருந்தாள் இந்து. மூன்று பிள்ளைகளுக்கு ஒவ்வொரு அறை என்று அமைத்திருந்தனர். இந்து கருவுற்றிருந்த சமயத்தில் இருந்து இந்துவும் சக்திவேலும் கீழேயே ஒரு அறையில் இருக்க தொடங்கினார்கள். சுதாவின் அறை ஒன்று . மற்றொன்று காலியாக இருந்ததால் தொழில் சம்பந்தமான கோப்புகள் , புத்தகங்கள் என்று நிறைய இருந்தது. இந்து சாருவை மனோகர் அறைக்கு அழைத்து சென்ற போது , அவன் அங்கே தான் இருந்தான். செல்லில் பேசிக்கொண்டிருந்தான்.

# 7. பகுதி - 7

மனோகருடைய மும்பை நண்பர்கள் திருமணத்திற்கு வர முடியவில்லை. அவர்கள் ஒருவர் பின் ஒருவராக அழைக்க அவர்களுடன் பேச அறைக்கு சென்று விட்டான். அந்த அரை கதவை திறந்ததும் நேரே மூவர் அமர்வது போல் ஒரு நீளமான சோபாவும் பக்கவாட்டில் இரு நாற்காலிகளும் மத்தியில் ஒரு சிறிய மேஜையும் இருந்தது . கதவருகே நின்றால் படுக்கை இருப்பதே தெரியாது. உள்ளே இரண்டடி எடுத்து வைத்தால் படுக்கை இருப்பது தென்படும் . அவன் படுக்கையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த போது யாரோ அரை கதவை திறப்பது தெரிந்து திரும்ப , உள்ளே வந்து கொண்டிருந்த சாருவும் இந்துவும் மனோகரை பார்த்து அப்படியே நின்றனர் .

“நீங்கள் இருப்பது தெரியாது ! நாங்கள் பிறகு வருகிறோம்” என்று இந்து சொல்ல இருவரும் அவசரமாக நகரத் தொடங்கினர் .

செல்போன் அழைப்பை துண்டித்து விட்டு ” ஏன் சாரு ! எதுவும்

வேண்டுமா?"

'சாரு 'எவ்வளவு சுலபமாக அழைத்துவிட்டான். அவள் கண்களில் ஆச்சரியத்தை பார்த்து மீண்டும் என்ன என்று கேட்டான்.

சாரு எதுவும் பேசாமல் நிற்க இந்து தொடர்ந்தாள் " உங்கள் அறையை காட்ட வந்தேன்! உங்களை தொந்தரவு செய்துவிட்டோம் ."

"அதெல்லாம் ஒன்றும் இல்லை ! இது சாருவின் அறையும் தானே"

"நீங்கள் டிபன் சாப்பிட்டீங்களா ! கீழே எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்", மீண்டும் இந்து.

"இல்லை ! ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது . நீங்கள் இருவரும் சாப்பிட்டீர்களா?"

அதற்குள் மனோகரை யாரோ அழைப்பது கேட்டது.

உறவினர்கள் எல்லோரும் விடைபெற தொடங்கிவிட்டனர் . அவர்களுக்கு விடையளிக்க மணமக்கள் இருவரையும் அழைத்தார்

சுந்தரம்.

உறவினர்கள் பெரும்பாலும் சென்று விட "இன்னும் ஏன் பட்டு சேலையை கட்டிக்கொண்டு நிற்கிறாய் , போய் மாற்றிக்கொள்ள" என்றார் விஜயா. அவள் பெட்டிகள் எங்கே இருக்கின்றதோ ? என்று தமக்கையை பார்க்க ," பெட்டிகள் எல்லாம் இன்னும் காரில் தான் இருக்கிறது . நான் எடுத்து வருகிறான் . " என்று இந்து நகர , "நான் பார்க்கிறேன்" என்று முன்னே சென்றான் மனோகர் . அவனோடு செல்லும் படி சாருவுக்கு இந்து ஜடை சொன்னாள் .

அவள் வருவதை உணர்ந்து தன் வேகத்தை குறைத்துக் கொண்டு நடந்தான் மனோகர்.அவன் காரின் பின்புற கதவை திறந்து பெட்டியை இறக்கி வைக்கவும் அவள் எடுக்க முயற்சிக்க , " இரு , மணி அண்ணா எடுத்து வருவார்கள் !" என்றான்.

"என்ன ? மௌன விரதமா !"

அவள் நிமிர்ந்து பார்க்க , அவன் குறுநகையுடன் லேசாக தலையை சாய்த்து இவளை பார்த்துக் கொண்டிருந்தான்.

சட்டென்று தலையை குனிந்து கொண்டாள் சாருமதி.

அதற்குள் வேலன் , நாற்பதுகளில் இருக்கும் ஒருவர் வந்து பெட்டிகளை எடுத்தபடி "என்னை கூப்பிட்டு இருக்கலாமே! தம்பி" என்றார் .

"இவரை தெரியும் தானே" என்றான் மனோகர் .

மணியை பார்த்து அவள் லேசாக முறுவலிக்க " தெரியாமல் என்ன தம்பி ! சாரும்மா என்ன புது ஆளா " என்றுவிட்டு "உங்கள் அறையில் வைக்கட்டுமா?" என்று கேட்டுவிட்டு எடுத்து சென்றார்.

சாரு உடை மாற்றி கொண்டு வரும் போது மற்றவர்கள் அவரவர் வேலைகளில் மூழ்கி இருந்தனர்.

ஆண்கள் மட்டுமே ஹாலில் தென்பட , பெண்கள் கூட்டம் எங்கே என்று சுற்றி பார்த்தாள் . பெண்களின் பேச்சுக்குரல் கூட கேட்க வில்லை .

அவள் தேடுவதை புரிந்துகொண்டு , சமையல் அறை பக்கம் செல்லும்படி மனோகர் ஜாடை காட்டினான் .

சமையல் அறையில் இந்து மற்றும் இரு பெண்கள் இருந்தனர் . மற்ற இருவரில் ஒருவர் அந்த வீட்டில் எப்போதும் இருக்கும் பணிப்பெண் ராணி. மற்றொருவர் திருமண வேலைகளுக்கு உதவ வந்திருக்க வேண்டும் . அருகில் சென்ற போது , இரவு உணவிற்காக வேலைகளை தொடங்கியிருந்தனர் .

“என்ன அக்கா ! நீ மட்டும் இருக்கிறாய் ?”

தங்கையை பார்த்து ” தயாராகி விட்டாயா ! மற்றவர்கள் எல்லாம் ஓய்வு எடுக்கிறார்கள் . இதோ என்ன செய்யவேண்டும் என்று சொல்லி விட்டு வருகிறேன் ”

“இட்லி தோசை போதும் அதற்கு சட்னியும் சாம்பாரும் செய்துவிடுங்கள் . இனிப்புக்கு கொஞ்சம் கேசரி மட்டும் செய்யுங்கள்”

“இதெப்படி போதும் ! இதென்ன ஒன்றும் இல்லாதவர்கள் வீடா ! இந்த வீட்டிற்கு வந்து இத்தனை வருடம் ஆகிவிட்டது ! இன்னும் ஒன்றும் தெரியவில்லை” சுதா சொல்லிக் கொண்டு வந்தாள் .

இந்த உணவு வேண்டாம் , வேறு செய்யலாம் என்று சொன்னால் போதாதா ? என்று சாருவுக்கு தோன்றியது . அதற்குள் இந்து

“இல்லை அண்ணி , அம்மா தான் செய்ய சொன்னார்கள்”.

“அம்மா சரியாக யோசியாமல் சொல்லி இருப்பார்கள் ! கூட சப்பாத்தி பன்னீர் குருமாவும், கொஞ்சம் புலாவும் செய்யுங்கள்” என்று சொல்லிவிட்டு சென்றாள் சுதா.

சகோதரிகள் இருவரும் சுதா செல்லவும் ஒன்றாகப் பெருமூச்சு விட்டனர் . இருவரும் ஒரேபோல் செய்ததைப் பார்த்து அவர்களுக்கே சிரிப்பு வந்தது . சமையல் அறையை விட்டு வெளியேறிக் கொண்டிருந்த சுதாவுக்கு அவர்கள் சிரிப்பது கண்ணில் பட்டது . அக்கா தங்கை ஒன்றாக சேர்த்து தன்னை பற்றி ஜாடை பேசுவதாக நினைத்தாள் . ஆத்திரம் பொங்கியது அவளுக்கு .

இரவு உணவின் போது முதலில் ஆண்கள் உணவருந்த இந்து பரிமாறிக் கொண்டு இருந்தாள். கல்யாண விருந்து, இனிப்புகள் என்று நிறையச் சாப்பிட்டதால் சுதா செய்யச் சொன்ன எதையும்

யாரும் தொடவில்லை. விஜயாவும் இதை எதற்குச் செய்தாய் என்று இந்துவைக் கேட்கச் சுதாவைக் காட்டிக் கொடுக்க மனமில்லாமல் நின்றாள். சாரு இந்துவைப் பார்த்துவிட்டு , சுதாவைப் பார்த்தாள் . தனக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை என்பது போல் அவள், அவள் பிள்ளைகளுக்கு உணவை ஊட்டிக் கொண்டிருந்தாள் .

“சாரு எங்கே ? அவளையும் மனோகருடன் உட்காரச் சொல்” என்றார் சுந்தரம்.

“நீங்கள் சாப்பிடுங்கள் மாமா ! நானும் அக்காவும் பிறகு சாப்பிடுகிறோம்” என்றாள் சாரு.

“நாளையிலிருந்து உன் அக்காவுடன் சாப்பிடலாம் !இன்று எங்களோடு சாப்பிடு” இது சுதாவின் கணவன் அருள்.

அவள் தயங்கி நிற்க “அவள் மட்டும் எப்படி உங்களோடு சாப்பிடுவாள் ! நாங்கள் பிறகு சாப்பிடுகிறோம்” என்று விஜயா பேச்சை முடித்தாள் .

எல்லோரும் உணவருந்திய பின் பேசிக்கொண்டிருக்க

இந்து சாருவை அழைத்துச்சென்றாள் .சாருவின் ஆடைகளைப் பெட்டியிலிருந்து எடுத்த படி . மறுநாள் செய்ய வேண்டிய வேலைகள் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

"அக்கா நீ ஏன் எல்லாவற்றுக்கும் அமைதியாக இருக்கிறாய் ! பேசினால் இவர்கள் உன்னை என்ன செய்துவிடுவார்கள் ?".

"நான் பேசிக் கொண்டுதானே இருக்கிறேன் !"

"உணவு விஷயத்தில் நடத்தை ஏன் சொல்லவில்லை ?"

"சாரு ! இது வீடு . ஏட்டிக்கு போட்டியாகச் செய்வதால் எல்லோர் நிம்மதியும் கெடும் . நீ சொல்வது போல் செய்தால் அங்கே எல்லோரும் சரியாகச் சாப்பிட்டு இருக்க மாட்டார்கள். ஒரு சண்டை தான் நடந்திருக்கும்." சாரு மீண்டும் தொடரும் முன் " இதோ பார் ! தேவை இல்லாமல் கண்டதை யோசிக்காதே ! நீ உன் கணவரோடு சிறப்பாக வாழ வேண்டும் . மற்றதெல்லாம் தற்காலிகமானது . உங்கள் இருவருக்கும் நல்ல புரிதல் இருந்தால் மற்றதெல்லாம் ஒன்றுமே இல்லை".

யாரோ வருவது போல் இருந்தது . சுதா தான் . "என்ன! அக்காவும் தங்கையும் ரகசியம் பேசிக்கொண்டிருக்கிறீர்கள் !"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை அண்ணி ! நாளை கோவிலுக்குச் செல்ல வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தேன்" என்றாள் இந்து .

சாருவின் பெட்டிகள் எல்லாம் திறந்து மெத்தைமேல் சில ஆடைகள் வைக்கப்பட்டிருந்தது .

"உன் தங்கை வந்து ஒரே நாளில் மனோ அறையைக் குப்பை ஆக்கிவிட்டாள்".

"இப்போது தான் எடுத்து வைக்கத் தொடங்கினோம் . சாரு எப்போதும் அறையை நன்றாக வைத்துக்கொள்வாள்" என்றாள் இந்து.

"நாளை உடுத்த வேண்டியதை எடுத்து வைத்துக் கொள் ! காலையில் சீக்கிரம் கிளம்ப வேண்டும் . அப்படியே ஒவ்வொன்றாக எடுத்து அலமாரியில் அடுக்கு" என்று சாருவுக்குச்

சொல்லிக்கொண்டிருந்தாள். அந்த அறையில் ஒரு சுவர் முழுவதும் அலமாரியாக இருந்தது .அதைத் திறக்க நினைத்த போது தான் அது பூட்டி இருந்தது தெரிந்தது .

“பிறகு பார்த்துக்கொள்ளலாம் அக்கா !” என்று சொல்லிக் கொண்டிருந்தபோது , சாருவின் உடைகளை ஆராய்ந்தாள் சுதா .

“என்ன புடவைகளையே காணோம் ! எல்லாம் சுடிதார்களாக இருக்கிறது ! எங்கள் வீட்டில் புடவை தான் பிடிக்கும்” என்றாள் சுதா .

“உங்கள் வீட்டிற்கு வரும் போது கட்டாயம் புடவை கட்டிக் கொள்வேன் அண்ணி , கவலைப்படாதீர்கள்” என்றாள் சாரு .

இது உன் வீடில்லை என்று சொல்வது போல் இருந்தது .

சுதாவுக்கு முகம் கறுத்தது . இந்துவிற்கு கைகள் உதறியது . சாதாரணமாகப் பேசினாலும் தவறாகப் புரிந்து கொள்ளும் சுதா, இதை நிச்சயம் சண்டையாக்குவாள் .

இந்து இங்கு வந்த புதிதில் சுதா ஏதோ சொல்லிக்கொண்டிருக்க

" எங்கள் வீட்டில் இப்படி தான் செய்வார்கள்" என்று விட்டாள் .

இந்து கூறியது அவள் பிறந்த வீட்டை . ஆனால் சுதா , வந்தவுடன் தனக்குத்தான் உரிமை என்று இந்து பேசுவதாகப் பெரிய சண்டையை இழுத்துவிட்டாள் . அவள் சொன்னதை நம்பி சக்திவேலும் இந்துவிடம் ஒரு வாரம் சரியாகப் பேசாமல் இருந்தான் .

இப்போது என்ன நடக்குமோ !

இந்துவிற்கு நடந்த சம்பவம் சாருவுக்கும் தெரியும் . இந்து பதறுவதைப் பார்த்து ,"என்ன அண்ணி ! நம் வீட்டில் நீங்கள் சுடிதார் அணிந்து பார்த்தேனே ! உங்கள் வீட்டில் எப்போது நீங்கள் புடவை அணிவது தான் வழக்கமா ?" என்றாள் சாரு .

சுதாவின் புகுந்த வீட்டை 'உங்கள் வீடு' என்றும் , பிறந்த வீட்டை 'நம் வீடு' என்றும் சொல்வதாகச் சமாளித்துவிட்டாள் .

என்ன சமாளித்தாலும் சுதாவின் கோபம் இன்னும் அவளுக்குள் இருந்தது. சாருவுக்கு எப்படித் திருப்பி கொடுப்பது என்று

யோசித்துக் கொண்டிருந்த போது மனோகர் அங்கே வந்துவிட்டான்
.

"என்ன மகளிர் மாநாடா?" என்றான்.

"அதெல்லாம் இல்லை!" என்று சுதா முதலில் வெளியே செல்ல, இந்து பின் தொடர்ந்தாள்.

அவன் அறையை நோட்டம் விட்டான். சுதா சொன்னதுபோல் அறையைக் குப்பையாக்க வில்லை என்றாலும் மெத்தையில் பாதி சாருவின் ஆடைகள் பரப்பி வைக்க பட்டறிந்தது. அவன் புருவங்கள் உயர்த்துவதைப் பார்த்து "சாரி! இப்போதே எல்லாம் எடுத்து வைக்கிறேன்" என்று வேகமாக எல்லாவற்றையும் பெட்டிக்குள் தள்ளினாள்.

"ஏய்! என்ன பண்ற! திரும்பவும் என் பெட்டிக்குள் போடுறே? கப்போர்டில் வை."

"பூட்டி இருக்கிறது."

"ஓ! இதோ!" என்று சாவியை எடுத்து அவனே

திறந்துவிட்டான்.

"நன்றி"

"ஒரு வழிய விரதம் முடிந்தது"

அவள் கேள்வியாய் நோக்க "அதுதான் காலையிலிருந்து மௌன விரதம் இருந்தாயே !"

அவள் மீண்டும் தலை குனிந்தாள்.

அவள் அப்படியே நிற்கவும் " எப்போதும் கப்போர்ட் பூட்டுவது இல்லை . கல்யாணத்துக்கு வந்த பிள்ளைகள் இதற்குள் ஒளித்து விளையாடத் தொடங்கிவிட்டார்கள் . ஆபத்து என்று தான் பூட்டி விட்டேன் . இந்த பக்கம் உனக்கு ஓகேவா ?" என்று அலமாரியின் ஒரு பக்கத்தைக் காட்டினான்.

அவள் மீண்டும் சரி என்பது போல் தலையாட்ட ," சாரு ! எனக்குக் காது நல்லா கேட்கும் "

இதை எதற்குச் சொல்கிறான் என்று யோசனையுடன் பார்க்க " நீ வாய் திறந்து பேசலாம். " அவளுக்கு லேசாகச் சிரிப்பு வந்தது .

அதற்குள் அவன் அலைபேசி சிணுங்கியது . அவன் சற்றே நகரத்து பேசத் தொடங்கினான். அவன் வரும் முன் ஓரளவு உடைகளை அடுக்கி வைத்தாள் .

“கொஞ்சம் பேசலாமா ?” என்று மனோகர் அருகில் வந்தான்.

அவள் சரி என்று தலையாட்டவும் , அவள் தோள்களைப் பற்றி அமர வைத்தான் . அவனும் அருகில் அமர்ந்தான்.

“நான் நினைத்தது போல் ட்ரான்ஸ்பெர் இன்னும் வரவில்லை. இன்னும் இரண்டொரு மாதங்கள் மும்பையில் இருக்க வேண்டி வரும் .”

சாரு எதுவும் பேசவில்லை . “அதிகப்படி ஒரு பத்து நாள் அங்கே இருக்க வேண்டும் என்று நினைத்தேன் . ஆனால் இப்போது அப்படி இல்லை . இன்னும் நான் யாரிடமும் சொல்லவில்லை. எல்லோரும் திருமணத்திற்குப் பின் நாம் இங்கேயே இருப்போம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் . அவர்களிடம் சொல்லும் முன் உன்னிடம் பேச வேண்டும் என்று நினைத்தேன்.”

சற்றே ஆச்சிரியமாக இருந்தது . மனைவிக்கு அவ்வளவு முக்கியத்துவம் தருகிறானே! ஒருவேளை இவன் அவன் அண்ணனைப் போல் இல்லையோ ?

“உன்னை என்னுடன் மும்பை அழைத்துச் செல்லத்தான் எனக்கு ஆசை. உனக்கு எப்படி ?”

இது என்ன கேள்வி ? மனைவி கணவனுடன் தானே இருக்க நினைப்பாள். இவள் யோசித்துக் கொண்டிருக்கும் போதே ” என் அலுவலகம் இருப்பது மும்பை புறநகர்ப் பகுதி . பாச்சுலராக இருக்கும் வரை எதோ என்று இருந்துவிட்டேன். இப்போது நீ வரும்போது , வீட்டில் எல்லா வசதிகளும் வேண்டும். அது மட்டும் இல்லை ,மும்பை நகர்ப் புறம் என்றால் நிறையத் தமிழ் மக்களும் இருப்பார்கள் . இப்போது நான் இருக்கும் பகுதியில் அப்படி இல்லை . அதுதான் சற்றே குழப்பமாகவே இருக்கிறது . உன் அபிப்பிராயம் என்னவென்று சொல் அதற்குத் தகுந்தது போல் நாளை எல்லோரிடமும் சொல்லிவிடலாம்”.

அவள் சற்றே யோசித்தாள். “என்னிடம் உனக்கு எந்த

தயக்கமும் வேண்டாம்” என்றான் மனோகர்.

இப்போது இவனிடம் என்ன சொல்ல வேண்டும். ‘ராமன் இருக்கும் இடமே சீதைக்கு அயோத்தி, ஆகையால் நானும் வருகிறேன்’ என்று சொல்ல வேண்டுமா?

“சாரி! முன்னாடியே உன்னிடம் பேசியிருக்க வேண்டும். எப்படியும் திருமணத்திற்கு முன்பு வந்து விடும் என்று தான் நான் நினைத்தேன். இன்னும் அம்மா அப்பாவிடமும் சொல்லவில்லை. ஆனால் எனக்கு நீ என்னுடன் வரவேண்டும் என்று தான் இருக்கிறது.”

சாருவிற்கு உள்ளே உறுத்தியது. அவனே அவளுக்கான முடிவெடுத்த பின் எதற்குக் கேட்க வேண்டும். அவள் பேசாமல் இருந்தாள்.

“ஏதாவது சொல்!”.

“நாளை பெரியவர்களுடன் பேசுங்கள். நான் என்ன சொல்வது?”

“அவர்களிடமும் பேசலாம் ! நீ முதலில் சொல்”

“என் விருப்பத்திற்கு அவ்வளவு மதிப்பு தருவீர்களா ?”

அவன் சிரித்துக் கொண்டே “உனக்கு அதில் என்ன சந்தேகம் !” என்று அவள் முகத்தைப் பார்த்தான் . அவள் முகத்திலிருந்தது சந்தேகமா ?இல்லை பயமா ?இரண்டும் இல்லை .அவள் முகத்தில் இருக்கும் இறுக்கம் ! அவனுக்கு ஏதோ நெருடியது .

“உனக்குக் களைப்பாக இருந்தால் படுத்துக்கொள்ள ! நாளை பேசலாம்”.

அவன் சொன்னவுடன் சாரு சென்று படுத்துக்கொண்டாள் . பாவம் களைப்பிலிருந்திருக்கிறாள் . இது தெரியாமல் நானும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டேன் என்று எண்ணிக்கொண்டு மனோகரும் உறங்கச் சென்றான் .

மறுநாள் காலை கோவிலுக்குச் செல்ல வேண்டும் அனைவரும் என்று புறப்பட்டனர். இரவில் சாரு முகம் இன்னும் மனோகர் கண்ணிலிருந்து மறையவில்லை . அவ்வப்போது மனோகர்

சாருவின் முகத்தை ஆராய்ந்தான். அவளிடம் ஒரு உற்சாகமின்மை அவனை ஏதோ செய்தது . “உடம்புக்கு எதுவும் செய்கிறதா சாரு” என்று அவளுக்கு மட்டும் கேட்கும் வண்ணம் ஒரு முறை கேட்டான். அவள் தலையைத் திருப்பாமல் பார்வை மட்டும் அவன் புறம் திருப்பினாள் . இல்லை என்பது போல் தலை ஆட்டினாள். அன்று முழுவதும் அவளைக் கவனித்தான் . அவள் யாரிடமும் கலகலப்பாகப் பேசவில்லை . மற்றவர்கள் சொல்வதைச் செய்தாள் ஏதோ சாவி கொடுத்த பொம்மை போல.

இவன் அறிந்த சாருவுக்கும் இப்போது இவன் அருகில் நிற்கும் சாருவுக்கும் எத்தனை வித்தியாசம் . ஒருவேளை இவளைத் தப்பாகப் புரிந்து கொண்டோமா ?

அனைவரும் வீடு வந்தனர் . வீட்டை அடைந்ததும் மனோகர் இடமாற்றம் தாமதமாவது பற்றிச் சொன்னான். பெரியவர்கள் சற்றே கலங்கினார் . அவர்கள் எதுவும் சொல்லும் முன் ” அதிகபட்சம் இரண்டு மாதம் . அதனால் சாருவை அங்கு அழைத்துச் செல்லலாம் என்று நினைக்கிறேன் . ”

“என்ன கண்ணா , இப்போது வந்து சொல்கிறாய் . இனிமேல் இங்கேயே தான் இருப்பாய் என்றாய் . இப்போது இப்படிச் சொல்கிறாய்” என்றாள் விஜயா.

“மேனேஜர் இன்னும் இரண்டு வாரங்கள் மும்பையில் இருக்கக் கேட்கிறார் . எதற்கும் இருக்கட்டும் என்று இன்னும் வீட்டை காலி செய்யாமல் இருந்தேன் .”

“நீ இருந்த வீட்டில் உன் நண்பர்கள் இருக்கப் போவதாகச் சொன்னாய் .”

“இல்லை அம்மா ! எனக்கு மாற்றம் உறுதியாகவில்லை என்று அவர்களுக்குத் தெரியும் . அதனால் ஒன்றும் தொல்லை இல்லை”.

“இரண்டு மாதத்திற்கு எதற்குச் சாருவை அங்கே அழைத்துச் செல்வது !ஒரு வேலை அதற்கு முன்பே வேலை மாற்றம் வந்துவிட்டால் ? நீ வேலையை முடித்துக் கொண்டு வா ! அதுவரை அவள் இங்கேயே இருக்கட்டும்”.

இதை ஓரளவு எதிர்பார்த்திருந்தான் மனோகர் . “அவளும்

வரட்டும் அம்மா!ஒருவேளை இங்கே வரத் தாமதம் ஆகும் என்றால் எப்படியும் சாருவை நான் அழைத்துப் போக வேண்டும்."

"

"என்னடா! இரண்டு மாதம் என்றாய். இப்போது இன்னும் நாளாகலாம் என்கிறாய். என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய். இல்லை உன் மனைவி வெளிஊரில் தான் இருக்க வேண்டும் என்று விரும்புகிறாளா? அப்படி இருந்தால் சொல்லிவிடு. ஒரே நாளில் எடுத்த முடிவா இல்லை கல்யாணத்திற்கு முன்பே பேசி வைத்துக் கொண்டு செய்கிறீர்களா?". இன்னும் பேசிக்கொண்டே போனாள் விஜயா.

சமையல் அறையில் அனைவருக்கும் டீ போட்டுக்கொண்டிருந்த சாருவுக்கு எல்லாம் கேட்டது. இந்துவும் அருகில் தான் தன் மகனுக்கு பால் ஆத்திக்கொண்டிருந்தாள். தங்கையின் முகத்தை பார்த்தவள் சற்றே பதறிப்போய் பாலை மகனிடம் கொடுத்து விட்டு அருகில் வந்தாள். "சாரு மா! கோபப்படாதே. அவர்கள் கோவத்தில் ஏதோ பேசுகிறார்கள்."

இந்துவை முறைத்து பார்த்தாள் . "அவர்களுக்கு மட்டும் தான் கோபம் வரவேண்டுமா ?".

டீ அடுப்பில் பொங்கி வர அதை நிறுத்திவிட்டு "நீ வா நான் பார்க்கிறேன் !"என்று கப்புகளில் டீயை ஊற்றினால் இந்து . "நீ இங்கேயே இரு" என்று சொல்லிவிட்டு அவள் மட்டும் மற்றவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்தாள் . விஜயா இன்னும் பேசிக் கொண்டுதான் இருந்தாள் .

"போதும் விஜயா !" சற்றே உரத்த குரலில் சுந்தரம் . "அது தான் இரண்டு மாதம் என்கிறானே ! விடு".

இந்து அருகில் நிற்பதைப் பார்த்து ," உன் தங்கை எங்கே ! "

"உள்ளே இருக்கிறாள்"

"சும்மா சொல்லக்கூடாது ! நேற்று வந்தவர்கள் சொன்னதுபோல் அக்கா தங்கை இருவரும் சாமர்த்தியசாலிகள் . காரியத்தை சாதித்துக் கொண்டு , உள்ளே ஒன்றும் தெரியாதவள் போல் நிற்கிறாளா ?"

“விஜயா” மீண்டும் சுந்தரம் அதட்டினார்.

“அம்மா ! அவளுக்கு இது பற்றி ஒன்றும் தெரியாது . நீங்கள் தேவை இல்லாமல் கற்பனை செய்யாதீர்கள் !எனக்கு பதிலாக வரவிருக்கும் புதிய நபர் வர மேலும் ஒரு வாரம் ஆகலாம் . அதுவரை என் மாற்றத்தை உறுதி செய்ய முடியாது என்று இங்கே கிளப்பும் முன்தினம் தான் சொன்னார். அப்போதே சொல்லி எல்லோருக்கும் கஷ்டம் தர வேண்டாம் என்று இருந்தேன் . புது ஆள் வரவில்லை என்றாலும் நான் ஒரு மாதத்தில் கிளம்பி விடுவேன் என்று சொல்லிவிட்டேன் . பொறுப்புகளை அப்படியே உதறிவிட்டு வர முடியாது . மேனேஜர் புரிந்துகொண்டார் . அதிக நாள் இழுத்தடிக்க மாட்டார் .” மனோகர் முடிக்கும் முன் ,” சரி ! அடுத்து என்ன என்று பார்க்கலாம் . எப்போது புறப்பட வேண்டும் !” என்றார் சுந்தரம் .

“இன்னும் ஒரு வாரம் விடுமுறை . அடுத்த ஞாயிறு கிளம்பலாம் என்று நினைக்கிறேன் .” என்றான் மனோகர்.

“டிக்கெட் போடும் போது சாருவின் அம்மா அப்பாவுக்கும்

சேர்த்து போட்டு விடு .'' என்றார் சுந்தரம் .

''அவர்கள் எதற்கு அப்பா?''

''முதல் முறை அவர்கள் பெண்ணை அழைத்துக்கொண்டு போகிறாய் . அவர்களும் வர வேண்டும் என்று பிரியப்படுவார்கள் .''

''அதெல்லாம் வேண்டாம் அப்பா ! வீண் அலைச்சல் !''

''இல்லை மனோ ! முதலில் இருந்து நீங்கள் இங்கே இருப்பீர்கள் என்று தன நாங்கள் எல்லோரும் நினைத்தோம். ரங்கநாதனிடமும் நான் அப்படித்தான் சொல்லியிருந்தேன் . இப்போது நீங்கள் மும்பை செல்ல முடிவெடுத்திருக்கிறீர்கள் . அதுவும் அவர்களுக்கு இன்று வரை தெரியாது . அவர்களிடம் பேசி விடுங்கள் .''

''இப்போது வேண்டாம் !இரவாகிவிட்டது . நாளை அவர்கள் இங்கே வருவார்கள் . அப்போது பார்த்து கொள்ளலாம்'' என்று விஜயா சொல்ல, ''போனில் இப்போதைக்கு விஷயத்தை சொல்''

என்று சொல்லிவிட்டு நகரத்தார் சுந்தரம் .

மனோகர் அறைக்கு சென்று படுக்கையில் விழுந்தான் .அம்மா பேசியதை எல்லாம் சாருமதி கேட்டிருப்பாள் .

அவள் எங்கே ? எழுந்து சென்று பார்த்தான். அவள் இன்னும் சமையலறையில் தான் இருந்தாள். இந்துவின் மகன் அகிலன் அவனுடன் எதோ விளையாடிக்கொண்டிருந்தான்.

“அக்கா இதற்கு தான் அப்போதே சொன்னேன் . ஒருவேளை அந்த சுமா இந்த வீட்டிற்கு வந்திருந்தால் , உனக்கு இன்று போல் பேச்சு கேட்க வேண்டியிருக்காது .”

“சும்மா உளறாதே ! இனி ஒருமுறை இப்படி பேசினால் அடி விழும்.”

மனோகர் உள்ளே வருவதை கண்டு சடாரென்று எழுந்து நின்றாள் . அகிலன் அவள் மடியில் வைத்திருந்த பொம்மைகள் கீழே விழுந்தன .

“அச்சச்சோ , எல்லாம் கீழே விழுந்துடுச்சு” என்று அகிலன்

சொல்ல , “சாரிடா கண்ணா !” என்றபடி சாரு பொம்மைகளை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

பெரும்பாலும் உணவு சமைக்கும் நேரம் தவிர பணிப்பெண் தங்கம் அங்கே இருப்பதில்லை. இப்போது இந்துவும் சாருவும் அகிலனும் இருந்தார்கள்.

சமையலறையில் ஒரு சிறு உணவு மேசை மற்றும் நாற்காலிகள் இருந்தது . அந்த நாற்காலியில் சாரு அமர்ந்திருந்த போது தான் மேஜையில் வைத்து விளையாடுவது சற்றே சிரமமாக இருக்க தன் சித்தி மடியில் பொருட்களை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான்.

சாரு எழுந்து நின்றதை பார்த்து அப்படியே நின்று விட்டான் மனோகர். அவன் பொம்மைகளை எடுத்து கொண்டு ” நான் தோட்டத்தில் விளையாடுகிறேன்” என்று ஓடினான் அகிலன்.

“உங்களுக்கு ஏதாவது வேண்டுமா ?” என்று இந்து கேட்க , “ஒன்றும் வேண்டாம் ! நீங்கள் அகிலனை பாருங்கள். சாரு மேலே வா !” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்தான்.

ஒருவேளை பெண்கள் இருவரும் பேசியது அவன் காதில் விழுந்திருக்குமோ ! சாரு அவன் பின்னே சென்றாள்.

அறைக்குள் நுழைந்ததும் "உன் அம்மா அப்பாவிடம் பேச வேண்டும். உனக்கு அவர்களையும் மும்பை அழைத்துச் செல்ல வேண்டும் என்று தோன்றினால் டிக்கெட் புக் செய்ய வேண்டும் . முதலில் போன் செய்" என்று கூறியவாறு உள்ளே சென்று அமர்ந்தான்.

"நான் வரவில்லை ." என்றாள் சாரு .

அவள் முகத்தை ஆராய்ந்தான் . அவள் கையை பற்றி அருகில் அமர வைத்தான். "அம்மா என் மேல் உள்ள கோபத்தில் பேசினார்கள். நீ அதை பெரிது படுத்தாதே !"

"நேற்று என் விருப்பத்திற்கு மதிப்பு தருவீர்கள் என்றீர்களே ! இது தான் என் விருப்பம்."

அவன் ஒரு நீளமான மூச்சை வெளியிட்டான். சாரு வேறெங்கோ பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் முகத்தை தன்

புறம் திருப்பினான். இருவருக்கும் அதிக இடைவெளி இல்லை . அவன் முகம் மிக அருகில் இருப்பது போல் இருந்தது . சாரு இதயம் வேகமாக துடித்தது.

“என் கூட வர பிடிக்கவில்லையா ?” கேட்டுவிட்டு , “உன் விருப்பம்” என்றான் சோகமாக .

“இல்லை ! அப்படி இல்லை . நான் ... அது ... அத்தை ..” என்று தடுமாறினாள் சாரு.

அவன் சிரித்தான் . சாருவுக்கு ஒன்றும் புரியவில்லை .“சாரு , உன்னை ரொம்ப ஸ்மார்ட்னு நினைச்சேன். இவ்வளவு சுலபமாக உன்னை ஏமாற்றலாம் என்று தெரியவில்லை .” அவள் புருவங்கள் சுருங்க , அதை நீவி விட்டான் . அவள் சற்று பின்னோக்கி நகர , அவள் தோள்களை பற்றி கொண்டான். சாரு முகம் சூடாவதை உணர்ந்தாள்.

“நீ அம்மா சொன்னதால் என்னுடன் வரவில்லை என்கிறாய் . நாளை அம்மாவே ‘என் பிள்ளை தனியே செல்லவா உன்னை திருமணம் செய்து கொண்டான்’ என்பார்கள் . அப்போது என்ன

செய்வாய் ?".

சாரு ஆச்சரியமாய் பார்த்தாள் . மனோகர் சொல்வது போல் நிச்சயம் பேசுவார்கள். இப்போது என்ன செய்ய வேண்டும். சாருமதி குழம்பினாள்.

"சாரு ! ரொம்ப யோசிக்காதே. நீ என்னுடன் வருகிறாய் . அவ்வளவுதான் . ஓகே வா . இப்போது அத்தை மாமாவுக்கு போன் செய்".

சாருவுக்கு ஆனந்தமாய் இருந்தது . சக்திவேல் இதுவரை ரங்கநாதன் தாமரையை மாமா அத்தை என்று அழைப்பது அபூர்வம் . பெரும்பாலும் 'உன் அம்மா', 'உன் அப்பா' என்றே குறிப்பிடுவான் . மனோகர் ' அத்தை மாமா ' என்று சொல்லவும் சொல்ல முடியாத சந்தோஷம் சாருவுக்கு .

ரங்கநாதனிடம் விஷயத்தைச் சொல்லவும் அவர் பெரிதாக ஒன்றும் சொல்லவில்லை. மகள் புது இடத்தில் எப்படிச் சமாளிப்பாளோ என்ற கவலையை மட்டும் தெரியப்படுத்தினார். அவரை மும்பை வரும்படி கேட்டான் மனோகர். "அத்தையிடம்

கேளுங்கள். நாம் நேரில் வரும் போது பேசிக்கொள்ளலாம் மாமா .” கொஞ்ச நேரம் இருவரும் பேசினார்கள்.

சாருமதி முழு நேரமும் மனோகரைத்தான் பார்த்துக்கொண்டிருந்தாள். இவன் எப்போதும் அவள் பெற்றோரிடம் இப்படியே பழகுவானா ?

விஜயா புதுமண தம்பதிகளாய் யார் யார் வீட்டிற்குச் சென்று வரவேண்டும் என்று ஒரு பட்டியலிட்டாள். மறுவீடு அழைத்துச்செல்ல ரங்கநாதன் தாமரை வந்தனர். அவர்களுடன் மும்பை செல்வது பற்றிப் பேசினார்கள். “மாப்பிள்ளை , அங்கே வீட்டில் பொருட்கள் எல்லாம் வாங்கி வைக்க வேண்டும். உங்களுக்கு அதற்கான நேரம் இருக்குமா என்று தெரியவில்லை . அதனால் நாங்கள் வந்தால் கொஞ்சம் உதவியாக இருக்கும்.” என்றார் ரங்கநாதன் .

“அதுவும் சரிதான்! இந்த காலத்துப் பெண்களுக்கு எதுவும் தெரியவில்லை” என்றார் விஜயா.

“நீங்கள் வீட்டை அமைக்க என்றால் உங்களுக்குச் சிரமம்

வேண்டாம் . ஓரளவு அங்கே எல்லாம் இருக்கிறது . சாருவுடன் நீங்கள் வர வேண்டும் என்றால் தாராளமாக வரலாம் .” என்றான் மனோகர் . “அதிக நாள் இருக்கப் போவதில்லை என்பதால் , பெரிதாக வாங்கவேண்டியது ஒன்றும் இல்லை .”

எல்லோரும் பேசி கடைசியாக, சாருவும் மனோகரும் மட்டும் செல்வதாக முடிவானது.

மும்பை செல்வதற்கு முன் சுதா வீட்டிற்குச் சென்று வரவேண்டும் என்று விஜயா சொல்லிருந்தாள். சுதாவின் மாமியார் பார்வதியும் எல்லாரும் வர வேண்டும் என்று அழைக்க , எல்லோரும் மதிய உணவுக்குச் சுதாவின் வீட்டிற்குச் சென்றனர்.

திருமணமான இந்த ஒரு வாரத்தில் உறவினர் வீட்டிற்குச் சென்று வருவது என்று எங்காவது போய் வந்தார்கள் மனோகரும் சாருமதியும். மற்ற நாட்களைப் போல் இன்றும் என்று நினைத்துச் சென்ற சாருவிற்கு , இன்றைய தினம் வேறுவிதமாக அமையப்போவது தெரியாது.

# 8. பகுதி - 8

சுதா வீடு சற்றே பழைய கால கட்டுமானம். பார்க்கப் புதுமையாக ஒன்றும் இல்லை என்பது போல் இருந்தது. உள்ளே சென்றதும் அந்த எண்ணம் தலைகீழாக மாறிவிட்டது. வீட்டின் அமைப்பு பழமையாக இருந்தாலும் 'பழமை என்றும் இனிமை' என்பது போல் பளிச்சென்று இருந்தது. வீட்டின் எந்த மூலையிலும் இருள் என்பதே இல்லாத வண்ணம் நல்ல பிரகாசமாக இருந்தது. இன்றைய வீடுகளைப் போல் ஒரு சுவர் முழுவதும் ஷோகேஸ் என்றில்லாமல் அங்கங்கே கலைப்பொருட்கள். பெரும்பாலும் வெங்கலம், பித்தளையால் செய்யப்பட்ட பொருட்கள். எதுவும் செல்லும் பாதையில் இடையே மறைத்துக்கொண்டு இல்லை. யாரையும் இடித்துவிடாத வண்ணம் நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்தது. அங்கங்கே புகைப்படங்கள்.

முன்னே விஜயா சுதாவுடன் பேசியவாறு மெதுவாகச் செல்லவும் , சாருமதிக்கு இவை எல்லாவற்றையும் பார்க்க ரசிக்க

முடிந்தது. சாருவை யாரும் கவனித்திருக்க மாட்டார்கள் என்று எல்லாப்புறமும் பார்த்த வண்ணம் உள்ளே சென்றாள். ஆண்கள் மூவரும் முன்னே சென்றுவிட்டனர். அகிலனும் மனோகரிடம் இருந்தான் . இந்து சாரு இருவரையும் மறைக்கும் வண்ணம் தான் சுதாவும் வித்யாவும் சென்றுகொண்டிருந்தனர். ஆனால் பார்வதி சாருவைத் தான் பார்த்துக் கொண்டிருந்தார்.

" என்ன சாரு! வீடு எப்படி இருக்கிறது?" என்றாள் பார்வதி.

சற்று தூக்கிவாரிப்போட்டது. அனைவரும் கேட்கும் வண்ணம் பார்வதி கேட்டது , சாருமதிக்கு சற்றே பதறியது. முதல் முறை ஒருவர் வீட்டிற்கு வரும் போது இப்படி அலசி ஆராய்வது போல் பார்த்துக் கொண்டு வருவது சற்றே அநாகரிகம் என்று சாருமதிக்கு தோன்றியது .

சாருமதி எதுவும் சொல்லும்முன் பார்வதியே சொன்னாள் ," உங்கள் வீடு போல் எல்லாம் சலவைக்கற்கள் கொண்டு புதிதாகக் காட்டியதில்லை, இது பழைய வீடு . என் மாமனார் கட்டிய வீடு ."

"புது வீடு யார் வேண்டுமானாலும் கட்டலாம். ஆனால்

பழைய வீட்டை இன்றும் புதிது போல் பராமரிப்பது மிகவும் கடினம். நீங்கள் அதைச் சிறப்பாகச் செய்திருக்கிறீர்கள். கடிவாளம் கட்டிக்கொண்டு வந்தாலும் இங்கிருக்கும் அழகு எல்லா புறமும் பார்க்கத் தூண்டுகிறது. இங்கிருக்கும் ஒவ்வொரு பொருட்களும் மிகவும் நேர்த்தியாக வைத்திருக்கிறீர்கள். அதுவும் இந்த சிலை வெண்கலம் பித்தளை என்று தெரியவில்லை . அதன் வேலைப்பாடு அற்புதம் . அதுவும் இந்த வேலைப்பாடுகளின் இடையே ஒரு தூசியும் இல்லாமல் சுத்தமாக பளிச்சென்று இருக்கிறது. எதோ அருங்காட்சியகத்திற்கு வந்தது போல் இருக்கிறது.''

சாருமதி இவ்வளவு பேசுவாளா ? என்றுதான் எல்லாரும் ஆச்சரியமாகப் பார்த்தார்கள், இருவரைத் தவிர.

''சாரு ,கொஞ்சம் மூச்சு வாங்கிக் கொள் .முதலில் வந்து உட்கார் !'' என்றான் அருள், சுதாவின் கணவன்.

அருள் சொன்ன போது தான் தெரிந்தது அவள் இன்னும் கதவருகே தான் நின்றுகொண்டிருந்தாள். இந்துவும் அங்கேயே தான் நின்றுகொண்டிருந்தாள். இருவரும் உள்ளே சென்று அமர்ந்தனர்.

“இவை எல்லாம் அப்பாவின் தேர்வு . அம்மாவுக்குப் பிடிக்கும் என்று செய்திருக்கிறார்.” என்றான் அருள். பார்வதி முகத்தில் பெருமை தெரிந்தது என்றாலும் ” இதில் பாதி நான் இந்த வீட்டிற்கு வரும் போதே இருந்தது. பல தலைமுறைகளாக இருப்பது .இன்றைய தலைமுறைக்கு இதெல்லாம் பிடிப்பதில்லை . வெளிநாட்டுப் பொருட்கள் மீது தான் மோகம் அதிகம். உனக்கேனும் கொஞ்சம் பிடிக்கிறதே ! சந்தோஷம் .” அவர் சொன்னது சுதாவை என்று எல்லோரும் புரிந்துகொண்டனர். அதற்குள் குடிக்கப் பழச்சாறு வந்தது.

சுதாவுக்கு எரிச்சல் மூண்டது. வந்தவுடன் பார்வதியிடம் பாராட்டு வாங்கியது மட்டும் இல்லை தன்னையும் மட்டுப்படுத்தி விட்டாள் .

“என்ன அம்மா ! மனோ மீண்டும் மும்மை செல்லிவேண்டுமாமே !” என்றாள் சுதா.

“என்ன செய்வது ! அவன் வேலை அப்படி. மேனேஜர் ஏதோ தாமதம் செய்கிறாராம் .” என்று முடிக்கப் பார்த்தாள் விஜயா.

“அது எப்படி அம்மா ! அவன் இங்கே இருக்கப் போவதாகத்தான் சொன்னான். இப்போது திடீரென்று நடக்கும்.” என்றவள் சாருவின் பக்கம் திரும்பி , “நமக்கு என்ன தெரியும் ! சொல்வதை நம்ப வேண்டியதுதான் .” என்று ஒரு நீண்ட பெருமூச்சை வெளியிட்டாள் விஜயா.

சாருவின் முகம் கருத்தது. மீண்டும் அதே போல் பேச்சு. அவள் கையிலிருந்த புடவை தலைப்பை இருகப்பற்றினாள் .

”

” முன்பே சுதா சொன்னாள் , கல்யாணத்திற்குப் பின் நீங்கள் இங்கேயே இருப்பீர்கள் என்று . இப்போது அப்படி இல்லை என்றால் உன் அம்மா அப்பாவிற்குத் தான் கொஞ்சம் கவலையாக இருக்கும். ” என்றார் சுதாவின் மாமனார்.

உடனே சமாளித்துக் கொண்டு ” அதெல்லாம் இல்லை பெரியப்பா ! அதிகபட்சம் இரண்டு மாதம் என்று தான் அவர் சொன்னார். ”

“அதுவும் சரிதான் ! எப்படியும் மகளை மாமியார் வீட்டுக்கு அனுப்ப வேண்டும் . அந்த வீடு கொஞ்சம் தொலைவில் என்று நினைத்துக் கொள்ள வேண்டியதுதான்.” என்றார் பார்வதி.

மதிய உணவு சற்றே தடபுடல் என்றே சொல்ல வேண்டும். பெரியவர்கள் நால்வரும் உண்டு முடித்த பின் , இளையவர்கள் அமர்ந்தனர்.

“என்ன சாரு !உனக்குச் சமைக்க வருமா ?” என்றாள் சுதா.

“இதுபோல் பெரிய விருதெல்லாம் படைக்கத் தெரியாது . அன்றாட சமையல் செய்வேன் .”

” அது சரி ! உன் அக்கா அப்படித்தான் சொன்னாள். ஆனால் வந்த புதிதில், அவள் செய்யும் சமையல் சப்பென்று இருக்கும் . இப்போது என் அம்மா கற்றுக்கொடுத்ததில் கொஞ்சம் பரவாயில்லை .”

இவளுக்கு இந்துவைக் குறைத்துப் பேசாமல் இருக்க முடியாது என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டாள் சாரு.

“எங்கள் வீட்டில் காரம் கொஞ்சம் தூக்கலாக இருக்க வேண்டும் . நீயேனும் கொஞ்சம் காரசாரமாகச் செய் . இந்துவுக்கேனும் என் அம்மா சொல்லிக்கொடுத்தார் . நீ எப்படி மனோவுக்கு செய்து தருவாயா ! பாவம் மனோ !” .

“உன் தம்பி வெறும் ரொட்டியும் ஜாமும் சாப்பிட்டு பலவாரங்கள் உயிர் வாழ்ந்தவன். அவனைப் பற்றி ஒன்றும் கவலைப் படாதே!” என்றான் அருள்.

மனோகர் முதல் முறை வெளிநாட்டுப் பயணம் செய்த போது , வேறு உணவு பிடிக்காமல் வெறும் ரொட்டியும் ஜாமும் சாப்பிட்டதாகச் சொல்லியிருந்தான். அருள் அதைக் குறிப்பிட்டதும் , “மாமா சொல்வது சரிதான் . அந்த அனுபவத்திற்குப் பின் இப்போது நான் கொஞ்சம் சமைக்கவும் கற்றுக் கொண்டேன் . சாருவுக்கு ஒன்றுமே தெரியவில்லை என்றாலும் நான் செய்து கொள்வேன்.” என்றான்.

“நல்ல கதை ! நீ சமைக்கத் தான் உனக்குக் கல்யாணம் செய்து வைத்ததா! இவளுக்கு என்ன வேலை ?”

இந்த பேச்சு சங்கடத்தை உருவாக்குவதை உணர்ந்து ,“முதலில் எங்களைச் சாப்பிட விடு . யார் சமைக்கலாம் என்ற பட்டிமன்றத்தை பிறகு வைத்துக் கொள்ளலாம் .பார் ! எல்லோர் இலையிலும் வைத்தது அப்படியே இருக்கிறது .” என்றான் அருள்.

அதற்கு மேல் பேச்சு எதுவும் இல்லாமல் அனைவரும் உண்ணத் தொடங்கினர். சாருவுக்கு உணவு இறங்க மறுத்தது . உணவைப் பரிமாறி விட்டு அதை உண்ண முடியாத மனநிலையைச் சுதா எளிதில் உருவாக்கிவிட்டாள். வீட்டிற்குள் நுழைந்ததிலிருந்து சாரு மதியைக் காயப்படுத்தச் செய்த முயற்சிகளில் சுதாவுக்கு வெற்றியே !

உணவிற்குப் பின் அனைவரும் பேசிக்கொண்டிருக்க வெற்றிலை சீவல் வைப்பதற்கான பேட்டி ஒரு மயில் போல் இருந்தது. அதன் தொகையில் சிறு சிறு கிண்ணங்கள் போலவும் . அதன் வயிற்றுப் பகுதியில் சற்றே அகலமான கிண்ணம் போலவும் அமைத்திருந்தது.

“இது கூட பெரியப்பா வாங்கித்தந்ததா ?” என்றாள் சாரு

பொதுவாக .

“இல்லை அம்மா ! இது என் பிறந்த வீட்டு சீதனம் ! எனக்கு வெற்றிலை சீவல் ரொம்ப பிடிக்கும் . அதனால் என் பிறந்த வீட்டில் வாங்கிக் கொடுத்தார்கள் .” என்றாள் பார்வதி .

“இன்னும் உள்ளே இதுபோல் நிறைய இருக்கிறது . சுதா அவளுக்குக் காட்டு” . சுதா கேளாதவள் போல் எங்கோ பார்த்துக்கொண்டிருக்க ,

“இன்னொரு முறை பார்க்கிறேன் பெரியம்மா!” என்றாள் சாரு . மீண்டும் சாருவின் பார்வை அந்த மயில் பேழைக்கே சென்றது .

இரண்டு மூன்று குழுக்களாகப் பிரிந்தனர். சுதா விஜயாவை தனியே அழைத்துச் சென்றாள் .

” என்ன அம்மா ! நீ எப்படி இவளை மும்பை அனுப்பச் சம்மதித்தாய் ?”

“நான் எங்கே சம்மதித்தேன் ? உன் அப்பா தான் சரி என்று விட்டார். உன் அப்பா சொன்னதின் பின் நான் எப்படி மறுத்துப்

பேசுவது ."

"எப்படிப் பேசுவது என்றால் ? சின்ன பெண் , புது ஊரில் எப்படிச் சமாளிப்பாள் ? என்று அப்பாவிடம் பக்குவமாகச் சொல்லிருக்க வேண்டாமா ?"

"சரி ! இப்போது என்ன கெட்டுவிட்டது ! சீக்கிரம் இங்கே தானே வரப்போகிறார்கள் ."

"சரியாய் போச்சு ! உனக்கு ஒன்றும் புரியவில்லை . அங்கே சென்ற பின் , எப்போதும் இங்கேயே இருந்துவிடலாம் என்று நினைத்து விட்டால்"

"நம்ம மனோ அப்படி எல்லாம் நினைக்க மாட்டான் . அவனுக்கு இங்கே வரத்தான் விருப்பம் ."

"ஒருவேளை வந்தவள் அப்படிச் சொன்னால் என்ன செய்வான் ?"

"அவள் சொல்வதை யார் கேட்பார்கள் ?"

"அவளைச் சாதாரணமாக நினைக்காதே ! அக்காளும்

தங்கையும் எல்லாம் திட்டம் போட்டுச் செய்வது போல் எனக்குத் தெரிகிறது"

"என்ன சொல்கிறாய் ! எனக்கு ஒன்றும் புரியவில்லை"

"உனக்கு ஒன்றும் தெரியவில்லை ! சாரு வந்ததிலிருந்து இந்துவின் நடவடிக்கையும் மாறிவிட்டது . இங்கே வந்தால் எப்போதும் என் பின்னே சுற்றுவாள் . இன்று அக்கா தங்கை இருவரும் ஏதோ பசை போட்டு ஒட்டியது போல் ஒன்றாகவே சுற்றுகிறார்கள் . எப்போது பார்த்தாலும் தனியே ரகசியம் பேசுகிறார்கள் . எனக்கேதோ இந்த இட மாற்றக் குளறுபடியும் சாருவின் திட்டமாக இருந்திருக்கும் என்று தோன்றுகிறது ."

"என்ன உளறுகிறாள் . இவள் என்ன கம்பெனி முதலாளியா ?முடிவை இவளே எடுப்பதற்கு !"

"கம்பெனிக்கு முதலாளியாக இருக்க தேவை இல்லை ! மனோவை சம்மதிக்க வைத்தால் போதாதா ? அவனும் வருங்கால மனைவி கேட்கிறாள் என்று சம்மதித்திருக்கலாம் . இங்கே வர விண்ணப்பிக்காமலே இருக்கலாம் . நமக்கென்ன தெரியும்".

விஜயா ,"நான் அன்று கேட்ட போது , அப்படி எல்லாம் இல்லை என்றுதான் சொன்னான். இப்போது என்ன செய்வது ?".

"இப்போதே அவன் மனைவி பக்கம் பேசத் தொடங்கி விட்டான். ஒரு மாதமோ ! இரண்டு மாதமோ ! அவளை இங்கேயே இருக்க வை ! அப்போது தான் அவர்கள் திட்டம் பலிக்காது ."

அதற்குள் யாரோ வருவது தெரிந்தது . அகிலன் மற்றும் சுதாவின் பிள்ளைகள். "பாட்டி !உங்களைக் கூப்பிடுகிறார்கள்".

"நன்றாக யோசித்துச் செய்" என்று அன்னைக்குச் சொன்னாள் சுதா.

எல்லோரும் புறப்படத் தயாராக நின்றுகொண்டிருந்தனர். சுதா ஒரு தட்டில் புடவை , ஷர்ட் பேண்ட் , தாம்பூலம் என்று வைத்து எடுத்து வந்தாள். அதைப் பார்வதியிடம் தர , தம்பதிகளாய் புதுமண தம்பதிகளை ஆசீர்வதித்தனார். "எல்லாவற்றையும் ஒரு பையில் போட்டுக் கொடு" என்று சுதாவிடம் சொல்லிவிட்டு உள்ளே சென்ற பார்வதி , துணியால் கட்டப்பட்ட வேறொரு சிறு மூட்டை போல் எடுத்து வந்தார்.

“சாரு!  இது உனக்குத்தான்” என்று அந்த மூட்டையைச் சாரு கையில் கொடுத்தார். “பிரித்துப் பார்.” என்றார்.

அது வெண்கலத்தால் ஆன சிறிய பெட்டி. மிகுந்த நுட்பமான வேலைப்பாடுகள் இருந்தன.

“நீங்கள் தேடிச் சேர்த்தது! நீங்களே வைத்திருங்கள் பெரியம்மா!” என்று திரும்பத் தர முயற்சித்தாள்.

“இது உனக்குத் தான்!  வைத்துக்கொள்!”  என்று அவளிடமே கொடுத்தாள்.

சுதா சொன்னது போல் எப்படிப் பேச வேண்டும் என்று வரும் வழியில் திட்டம் போட்டுக் கொண்டே இருந்தாள் விஜயா. எது செய்தலும் இன்றோ நாளையோ செய்ய வேண்டும்.  நாளை மறுநாள் விமானத்தில் செல்ல ஏற்கனவே பயணச் சீட்டுகளை எடுத்துவிட்டதாக மனோ சொன்னான்.

வீடு வந்ததும் சுந்தரமும் சக்திவேலனும் கடை கணக்கு பற்றி ஏதோ பேசிக்கொண்டிருக்க , மனோகரும் அவர்களுடன்

அமர்ந்தான். சாருவும் இந்துவும் அங்கே இல்லை .

விஜயா மெல்லத் தொடங்கினாள்,'' எனக்கு ஏதோ கவலையாக இருக்கிறது . சாருமதி எப்படி தனியே அங்கே இருப்பாள் ?நம் ஆட்கள் யாரும் பக்கத்தில் இருக்கிறார்களா ? பாஷை தெரியாத ஊர் .''

''சாரு சின்ன பிள்ளை இல்லை . அங்கே ஆங்கிலம் தெரிந்தால் போதும் . நான் ஒன்றும் அவளை விட்டு விட்டு வெகு தூரம் செல்லப் போவதில்லை. வீட்டிலிருந்து அதிகபட்சம் பத்து நிமிடம்.''

''அதற்கில்லை ! இரண்டு மாதம் தானே! அவள் இங்கேயே இருக்கட்டுமே !'' என்றாள் விஜயா .

''அது தான் எல்லாம் பேசிவிட்டோமே ! மீண்டும் எதற்குத் தொடங்குகிறாய் !'' என்றார் சுந்தரம் .

''உங்களுக்கு என்ன தெரியும் ! இவனுடன் இருப்பவர்கள் வெளிமாநிலத்தவர்கள். . இவன் வேலைக்குச் சென்று விட்டால் ,

அவள் காலையிலிருந்து மாலை வரை என்ன செய்வாள் ?”.

“அம்மா ! நீ சொல்வது புரிகிறது ! இப்போது எல்லா ஏற்பாடுகளும் செய்தாயிற்று . முதலில் கொஞ்ச நாள் இருக்கட்டும் . அவளுக்குப் பிடிக்கவில்லை என்றால் இங்கே வந்து விடட்டும் .”

“அவள் உன்னிடம் சொல்லத் தயங்கினாள் ? பாவம் சின்ன பெண் ?”

சட்டென்று சிரித்தான் சக்திவேலன் . “எதற்கடா நீ சிரிக்கிறாய் ?”

“பின்னே ! மனோ ஏதோ வில்லன் போல் நீயே சொல்கிறாய் !”

“அதில்லை ! கொஞ்சம் பயமாக இருக்கிறது !”

“அதுதான் அவன் சொல்கிறானே ! சாருவுக்குச் சிரமமாக இருந்தால் இங்கே அனுப்பி வைப்பதாக ! எனக்குக் கொஞ்சம் சுக்கு காப்பி கலந்து வா” என்றார் சுந்தரம் .

“இந்து ! மாமாவிற்குக் கொஞ்சம் சுக்கு காபி போட்டு எடுத்து வா !” என்றாள் விஜயா அங்கேயே அமர்ந்தபடி .

இந்து அகிலனைக் குளிப்பாட்டி விட்டு வருவதாகச் சொல்லிருந்தாள். சாருவுக்கு விஜயாவின் குரல் கேட்க, காபியுடன் வந்தாள்.

தட்டில் நான்கு கப்புகள் இருக்க ,'' எங்களுக்குச் சுக்கு காப்பி வேண்டாம் ! பில்டர் காபி '' என்றாள் விஜயா.

"மாமாவிற்கு மட்டும் தான் சுக்கு காப்பி . மற்றது மூன்றும் வெறும் காபி தான்'' என்று நீட்டினாள்.

"இந்து எங்கே !"

"அகிலனை குளிப்பாட்டுகிறாள்." அவள் செல்ல முற்படும்போது ,'' என்னம்மா ! உனக்குத் தேவையானதை எல்லாம் எடுத்து வைத்துவிட்டாயா ?''

"இன்னும் இல்லை மாமா ! இனிமேல் தான் !"

"எல்லாம் எடுத்து வை ! நாளை ஒரு நாள் தான் இருக்கிறது !".

"இப்போது தான் சொன்னேன்! உனக்கு அங்கே ஏதும் சிரமம் இருந்தால் , இங்கே வந்து விடு !"

சாருமதி விஜயாவை ஆச்சரியமாய் பார்த்தாள். தன் சிரமத்தைப் பார்க்கிறாரா ?

“எதற்கும் பத்து நாளைக்குத் தேவையானதை எடுத்து வை .போதும்”

இந்துவும் அங்கே வர “சாருவுக்கு ஒரு பத்து நாளைக்குத் தேவையானதை எடுத்து வைக்க உதவி செய் .”

இதுவரை நடந்தது ஒன்றும் தெரியாத இந்து ,“பத்து நாளைக்கு மட்டுமா !” என்றாள் ஆச்சரியமாக.

“பின்னே ! உன் தங்கையை அங்கேயே தனிக் குடித்தனம் வைத்து விடலாம் என்று நினைத்தாயா ?”

எல்லோரும் விஜயாவை பார்த்தனர் . “நான் ஒன்றும் அப்படி” என்று அவள் சொல்லி முடிக்கும் முன் ,“எல்லாம் தெரியும் எனக்கு ! உன் தங்கை பத்து நாள் இருந்துவிட்டு வரட்டும் .”

முதலில் சாருமதியின் சிரமம் பற்றிப் பேசினாள் . இப்போது பேசுவது சாருமதிக்காக இல்லை .

“நீங்கள் சொல்வது சரிதான் அத்தை . எனக்கும் அங்கே செல்வது கலக்கமாகத்தான் இருக்கிறது. நான் இங்கேயே இருந்து விடுகிறேன். அவர் வேலையை முடித்துக் கொண்டு வரட்டும் .” என்றாள் சாரு.

விஜயா இதை எதிர்பார்க்கவில்லை. “இல்லை இல்லை! ஏற்கனவே டிக்கெட் எல்லாம் எடுத்தாயிற்று ! அதை வீணடிக்க வேண்டாம் . நீ இப்போது போ ! ஒரு பத்து நாள் இருந்துவிட்டு வா !”

சாரு பேச முற்படும்போது ,இந்து “நீங்கள் சொல்லும்படியே செய்துவிடலாம் அத்தை . நாங்கள் வேண்டியதை எடுத்து வைக்கிறோம் .வா சாரு .”

மனோகர் எதுவும் பேசாமல் அமர்ந்திருந்தான் . “நீ எதற்கு அமர்ந்திருக்கிறாய் ?” என்று விஜயா கேட்கவும் ,” அம்மா ! ஏற்கனவே சொன்னேன் இது எதிர்பாராத தாமதம் என்று . மீண்டும் ஏன் சாருவை இதில் இழுக்கிறாய் . ”

“இப்போது நான் என்ன அவளைச் சொல்லிவிட்டேன்.

பாருங்கள் எப்படிப் பேசுகிறான் என்று ! இப்போதே நான் பொல்லாத மாமியாராகிவிட்டேன் .” என்று விஜயா தொடங்க , “எல்லோரும் முதலில் எழுந்து அவரவர் வேலையைப் பார்க்க போங்கள்” என்று உறக்க கூறிவிட்டு எழுந்தார் சுந்தரம் .

மனோகர் எழுந்து தன் அறைக்குச் சென்றான். உள்ளே பேச்சுக் குரல் லேசாகக் கேட்டது.

“ஏய் ! எடுத்துவை . அப்படியே உட்கார்ந்திருக்கிறாய் .” இந்துவின் குரல்.

“நான் எங்கும் போகவில்லை . நீ போய் உன் வேலையை பார் .”

“புதிதாக நீ தனியே ஆரம்பிக்காதே”

மனோகர் அறையின் கதவருகே வந்து விட்டான் .

“இப்போது புரிகிறதா ! நான் வந்ததால் உன் வாழ்க்கை ஒன்றும் சுலபம் ஆகிவிடாது என்று. இதற்கு மனோகர் சுமாவை கல்யாணம் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறதா ?” சாருவின் வார்த்தைகள்.

‘சுமா’ இந்த பேரை மனோகர் இதற்கு முன்னும் சாரு சொல்லிக் கேட்டிருக்கிறான். அதற்கு மேல் அவன் அங்கே நிற்கவில்லை.

# 9. பகுதி - 9

மனோகர் நேரே மாடிக்கு வந்தான். மனதில் ஏதேதோ கேள்விகள் . சாருமதி சொன்னதின் பொருள் என்ன ? யார் அந்த சுமா ? அவளை ஏன் நான் மனந்திருக்க வேண்டும் ?எ ப்படி வேறு பெண்ணுடன் இணைத்து பேச அவளுக்கு மனம் வந்தது ? அவளுக்கு அவன் மேல் காதல் என்பதே இல்லையா ? இந்த திருமணத்தில் அவளுக்கு விருப்பம் இல்லையா ? ஏன் ? சாருவிடம் நேரடியாக பேசிவிடலாமா ? ஒருவேளை அவள் பிடிக்கவில்லை என்று சொல்லிவிட்டாள் ? சாருவை தவிர மனம் வேறொரு பெண்ணை எப்படி ஏற்கும் ? இன்னும் பல கேள்விகள் .

தலையே வெடிப்பது போல் இருந்தது .

அவனை சுற்றி இருட்டி. நிகழ்விலும் நினைவிலும் . எவ்வளவு நேரம் அப்படி அமர்ந்திருந்தான் என்று அவனுக்கு தெரியவில்லை . அவன் செல் சிணுங்கியது. பேச மனமின்றி இணைப்பை துண்டித்தான். மெதுவாக அறைக்கு வந்தான் . சாரு அங்கே இல்லை.

பெட்டி மட்டும் ஒன்று தயாராக இருந்தது.

சட்டென்று அவனுக்கும் அவன் மனைவிக்கும் இடையே பெரிய சுவர் எழுந்தது போல் உணர்ந்தான். மும்பை செல்லும் வரை சாருவிடம் அதிகமாக பேசவில்லை.

விமான நிலையத்திலிருந்து ஒரு டாக்ஸியில் சென்றனர். செல்லும்வரை சுற்றியுள்ள பகுதிகளை பற்றி சொன்னான்.

அங்கிருக்கும் கடைகளை பற்றி சொன்னான். சில நண்பர்களை பற்றி சொன்னான்.

அவள் எதுவும் பேசவில்லை. வீடு வந்துவிட்டது. அந்த பகுதியில் நிறைய வீடுகள். ஆனால் அதிக நெருக்கம் இல்லாமல் இடைவெளிவிட்டு இருந்தன. இவர்கள் இருக்கப்போகும் வீடு ஒரு வீட்டின் மேல் தளத்தில். கீழே வீட்டின் உரிமையாளர்கள் இருந்தனர் . ஆட்கள் வரும் அரவம் கேட்டு ஒரு பெண்மணி உள்ளே இருந்து வெளியே வந்து பார்த்தார்.

“நமஸ்தே பாபி! மேரா பீவி சாரு !” என்று அறிமுகம் செய்து

வைத்தான்.

அந்த பெண்மணி வெகு உற்சாகமாக வரவேற்றார். முதலில் அவர் வீட்டிற்குள் அழைத்து சென்றார் . வெகுவாக ஹிந்தியில் பேசினார் . சாரு எதுவும் பேசாம இருக்க , ஆங்கிலத்தில் பேச தொடங்கினர் . சிறிது நேரத்தில் விடை பெற்றுக்கொண்டு அவர்கள் பகுதிக்கு வந்தனர்.

கீழ் வீட்டை போலவே பெரிதாக இருந்தது. இரண்டு படுக்கையறை கொண்ட வீடு . சமையல் அறையில் அடுப்பு ஒரு மிக்ஸி தவிர ஒன்றுமே இல்லை என்பதுபோல் துடைத்து வைத்திருந்தது .

அங்கே ஆளுயர கம்போர்டில் சமையல் பாத்திரங்கள் இருந்தன . நிறைய பாத்திரங்கள் இல்லை என்றாலும் இவர்கள் இருவருக்கு சமைக்க அது போதுமானது. அடுப்புக்கு மேல் இருந்த கம்போர்டில் டி சர்க்கரை ஒன்றிரண்டு பொட்டலங்கள் தவிர எதுவும் இல்லை. ஹால் பெரிதாகவே இருந்தது. டைனிங் ஹால் மற்றும் ஹால் சேர்ந்தாற்போல் கட்டி இருக்க வேண்டும்.

அந்த பெரிய அறையின் மறுபுறம் மூன்று கதவுகள் . இரண்டு படுக்கையறை . மற்றொன்று ஒரு சிறிய பலகணி. பாதுகாப்பிற்காக முற்றிலும் க்ரில் போடப்பட்டிருந்தது.ஒரு படுக்கை அறையில் கட்டில் மெத்தையும் இருந்தன. மற்றொன்று காலியாக இருந்தது. ஹாலில் ஒரு மூலையில் ஒரு பிரிட்ஜ் , பலகணி அருகே வாஷிங் மெஷின் . இரண்டு நாற்காலிகள் . மற்றும் கணினியில் வேலை செய்வதற்கு ஏற்ப ஒரு மேஜை நாற்காலி ,மற்றும் தரையில் ஒரு படுக்கை . வடநாட்டில் நிறைய வீடுகளில் அப்படி பார்க்கலாம் . விருந்தினர் அமர அப்படி ஒரு ஏற்பாடு செய்வது வழக்கம் .

ஊரில் இருக்கும் மனோகரின் அறையில் இல்லாத பொருட்களே இல்லை என்று சொல்லலாம். அவன் அறையில் இருக்கும் பொருட்களில் பாதி கூட இந்த மொத்த வீட்டில் இல்லை. சாருமதிக்கு ஆச்சர்யமாக இருந்தது. மனோகர் நன்றாகவே சம்பாதிக்கிறான் என்பது அவளுக்கு தெரியும். அப்படி இருக்க இவன் அத்யாவசியமானதை தவிர வேறொன்றும் வாங்கி குவிக்க வில்லை . இன்னும் சொல்லப்போனால் தேவைகளை சுருக்கி கொண்டு இருக்கிறான். இதை அவனிடம் சொல்லலாமா என்று

யோசித்தாள் . அவளிடம் அவன் நாள் முழுவதும் இயல்பாய் பேசவில்லை. இப்போது வேண்டாம் என்று நினைத்தாள்.

பெட்டிகளை படுக்கை அறையில் வைத்துவிட்டு வந்தவன் , “உனக்கு களைப்பு இல்லை என்றால் ,சமைக்க பொருட்கள் வாங்கி வரலாம். அரிசியை தவிர வீட்டில் ஒன்றும் இல்லை .”

அவளிடம் இருந்து பதில் ஏதும் வரவில்லை. அவள் இருக்கும் பக்கம் திரும்பி பார்த்தான் .

அவள் மனோகரை பார்த்து கொண்டு தான் நின்றிருந்தாள்.

“உன்னைத்தான் கேட்டேன் ! என் முகத்தில் என்ன எழுதி இருக்கிறது என்று பார்த்துக்கொண்டு நிற்கிறாய் ?”

“கோபம் என்று எழுதி இருக்கிறது”.

அவனுக்கு சிரிப்பு வந்தது. “சரி ! போகலாம் வா”

“என் மேல் என்ன கோபம் ?”

“கோபம் ஒன்றும் இல்லையே ! ஏதோ யோசித்துக்

கொண்டிருந்தேன்.''

''இரண்டு நாட்களாகவே யோசனை !''

சற்று புருவம் சுருக்கி யோசித்தான். ''நேற்றில் இருந்து உங்கள் முகம் இப்படி தான் இருக்கிறது''.

ஒரு நிமிடம் அவளை உற்று பார்த்தான் . அவள் அவன் முகமாற்றத்தை கவனிக்கிறாளா ? அவனை பிடிக்கவில்லை என்றால் , அவன் உணர்வுகளை பற்றி யோசிப்பாளா ? மனதிற்குள் சிறு உற்சாகம். சட்டென்று அவள் கன்னத்தில் முத்தமிட்டாள். அவள் முகம் சிவக்க தலை குனிந்த படி , ''நிச்சயம் பொய் சொல்லி இருக்கிறீர்கள் ! நான் கண்டுபிடித்து விட்டேன் என்று இப்படி சமாளிக்கிறீர்கள்''.

அவனுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது . ''என் பாடு கொஞ்சம் திண்டாட்டம் தான். மனைவி புத்திசாலியாக இருக்கிறாளே !''

ஒரு இரு சக்கர வாகனம் அவனுக்கென்று வைத்திருந்தான்.

இருவரும் அதில் சென்று பொருட்களை வாங்கி வந்தனர். சாரு

இருவரத்திற்க்கான பொருட்கள் என்று கணக்கிட்டு எடுத்து வந்தாள்.

மறுநாளே மனோகர் அலுவலகத்தில் சேர வேண்டும் என்று , அவளுக்கு அக்கம் பக்கம் பற்றி சொன்னான்.

“சுற்றிலும் நிறைய வீடுகள் இருப்பதால் , இங்கே ஒன்னும் பயம் இல்லை. ஹவுஸ் ஓனர் அதிகம் என்னிடம் பேசியதில்லை என்றாலும் ஏதேனும் கேட்டால் செய்வார்கள். உடன் வேலை செய்பவர்கள் குடும்பம் இங்கே இரண்டு மூன்று இருக்கின்றது . அவர்கள் யாரும் தமிழ்நாட்டை சேர்ந்தவர்கள் இல்லை. நாளை மாலை நண்பர் ஒருவர் வீட்டில் நம்மை அழைத்திருக்கிறார்கள். அங்கே சென்றால் உனக்கு யாரேனும் பழக கிடைக்கலாம்.” பேசியவாறே சமையல் பொட்டுகளை அடுக்க அவளுக்கு உதவி செய்தான்.

பொருட்கள் எல்லாம் பெரும்பாலும் அப்படியே பொட்டலங்களாக வைத்தான். அதற்கான டப்பாக்கள் என்று எதுவும் இல்லை . ஏற்கனவே உடைத்திருந்த பொட்டலங்கள் ரப்பர் பேண்ட் போட்டு கட்டப்பட்டிருந்தது .

“நான் பெரிதாக சமைப்பதில்லை.  காலை உணவும் மதிய உணவும் கம்பெனியில் தான்.  இரவு மட்டும் எப்போதாவது சமைப்பேன்.”

“அன்று சுதா அண்ணி வீட்டில் சமைக்க தெரியும் என்றீர்கள் !”

பாத்திரங்களை வெளியே எடுத்துக் கொண்டிருந்தேன், “இப்போதும் சமைப்பதில்லை என்று தான் சொன்னேன்” என்று அவளை முறைத்தான்.  “பெரும்பாலும் நேரம் கிடைப்பதில்லை . பணிகளை முடித்து விட்டு வரும் போதே கலைப்பாய் இருக்கும் . சமைக்க தோன்றாது. எப்போதாவது நேரம் கிடைக்கும் போது சமைப்பேன்.”

அவள் சிரித்துக்கொண்டு “சமைக்கவே நேரம் இல்லை என்றால் , வீட்டை எல்லாம் எப்படி சுத்தம் செய்வீர்கள்?”

“நான் என்ன சிறு பிள்ளையை ?  எல்லாவற்றையும் கண்ட இடத்தில் வீசி விளையாட ? வீட்டுக்கு வருவதே தூங்க மட்டும் தான் . பெரிதாக சுத்தம் செய்ய எதுவும் இருக்காது .வாரம் ஒரு முறை பெருக்கி துடைத்தால் போதும் .”

சாரு ஆச்சரியமாய் பார்த்தாள் . விஜயாவின் மகன் துடைப்பத்தை எடுத்து பெருக்குவதா ?

“என்ன ? எதுவும் எனக்கு கொம்பு முளைத்து விட்டதா ?”

“முளைத்தாலும் முளைத்திருக்கும் ! கனம்பொருந்திய திருமதி விஜயாவின் புதலவன் இது போன்ற வேலைகள் செய்தால் கொம்பு முளைக்க வேண்டாமா ?” என்றவாறு மேடையை சுத்தம் செய்ய தொடங்கினாள் . மனோகர் அவள் காதை பிடித்து திருகி “கொஞ்சம் கூட பயமில்லை உனக்கு!”

“பயமா ? யாரிடம் ?”

அவன் இன்னும் அவள் காதை விடவில்லை . “விடுங்கள் மனோ !”

இப்போது அவன் ஆச்சரியமாக பார்த்தான் ,” என்ன ?மனோவா?”

“ஓ ! சாரி . தெரியாமல் சொல்லிவிட்டேன்”

“சாரி எல்லாம் எதற்கு ! நீ எப்படி வேண்டுமானாலும் கூப்பிடு

. எனக்கு ஒன்றும் இல்லை. ஊரில் இருந்தவரை பேசத்தெரியாத பிள்ளை போல் இருந்தாய். இப்போது பார்!''

''உங்களுக்கு எப்படி இருக்க வேண்டும்! எது பிடித்திருக்கிறது'' சற்று யோசித்துவிட்டு ''இப்படி இருப்பது தான் நன்றாக இருக்கிறது !''.

''இதை மறந்துவிட்டேன் பார்! வீட்டில் டிவி இல்லை. நான் பார்ப்பதில்லை என்று அது பற்றி நினைக்கவில்லை. லேப்டாப்பில் படம் பார்ப்பதோடு சரி. உனக்கு போரடித்தால் ஏதாவது பார். கொஞ்சம் படங்கள் அதிலேயே இருக்கிறது. இன்னும் கொஞ்சம் சிடி-கள் அந்த மேஜையில் இருக்கிறது.'' என்று லேப்டாப்பை எடுத்து வந்து எதோ செய்ய தொடங்கினான்.

''நாளை காலை மதியம் என்ன செய்யட்டும். லஞ்ச் பாக்ஸ் கூட இருக்கிறது!'' என்றவாறு அவனருகில் வந்தமர்ந்தாள்.

''ஏதாவது சிம்பிளாக செய்! மதிய உணவிற்கு நான் வீட்டிற்க்கே வந்து விடுவேன்.''

“ஓ ! சூப்பர் .அப்போது காலையில் பால் காட்சி விளக்கேற்றிவிட்டு , பொங்கலுக்கும் சான்டனியும் செய்துவிடுகிறேன் . மதியத்திற்கு பிறகு சமைத்து கொள்கிறேன்.” அவனிடம் இருந்த சில படங்களை காட்டினான் . எல்லாம் விருதுகள் வென்ற படங்கள். சிலவற்றை வரிசைப்படுத்தி வைத்திருந்தான் . “முதலில் இவைகளை பார் ! மிகவும் சிறந்த படங்கள்”. கடைசியாக இருக்கும் படங்கள் எல்லாம் சற்று வன்முறை கலந்த படங்கள் . இடையில் இருப்பது அறிவியல் புனைகதைகள் .” என்றான் .

ஏற்கனவே கடையில் வாங்கி வந்திருந்த உணவை சூடு பண்ணி சாப்பிட்டார்கள் .மறுநாளில் அவன் பணிக்கு செல்வது வழக்கமானது . மதியம் வரை கொஞ்சம் வேலை இருந்தாலும் , மதியத்திற்கு பிறகு செய்ய ஒன்றும் இல்லாமல் , புது ஊரில் தனியே செல்ல மனமில்லாமல் , ஏதாவது படங்களை பார்ப்பாள் சாருமதி .

படங்கள் எல்லாம் எதார்த்தமாக இருக்கவேண்டுமென்று , கஷ்டங்களையும் கண்ணீரையும் அளவுக்கு அதிகமா

காட்டியிருந்தார்கள் . அவளுக்கு அழுகை நிறுத்த படம் என்றாலே பிடிக்காது . அதை அவனிடம் சொல்லவும் மறுநாள் வேறு சில படங்களையும் புத்தகங்களையும் வாங்கி வந்தான் .

மதிய வேளையில் தினமும் படம் பார்ப்பது புத்தகம் படிப்பது என்று கொஞ்சம் மந்தமாக இருந்தாலும் , மாலையில் வீடு வந்ததும் , இருவரும் எங்காவது சுற்ற கிளம்பி விடுவார்கள் . இடையில் ஒரு நாள் மும்பை நகர்ப்புறம் முழுவதும் சுற்றினார்கள்.

நண்பர் ஒருவர் வெற்றிக்கு அழைத்துச் சென்றான் . அங்கே வேறு நண்பர்களும் வந்திருந்தனர். முதல் முறை என்பதால் எல்லோரிடமும் சகஜமாக பழக இயலவில்லை . அதுவும் எல்லோரும் இந்தியில் தான் பேசினார்கள் . இவளுக்காக அவ்வப்போது ஆங்கிலத்தில் பேசினார்கள் . ஏனோ அவர்களிடம் ஒரு ஒட்டுதல் இல்லை சாருமதிக்கு . எப்படியும் சீக்கிரம் ஊருக்கு சென்று விடுவோம் என்ற தோன்றலும் அவர்களிடம் நட்பு பாராட்ட தூண்டவில்லை.

நாட்கள் சுகமாகவே நகர்ந்தது .

விஜயா சொல்லிருந்தா பத்து நெருங்கிவிட்டது . இனி ஊருக்கு திரும்ப வேண்டுமே என்று சாருமதிக்கு கவலையாக இருந்தது. அவனிடம் டிக்கெட் பற்றி கேட்டாள் .

“டிக்கெட் புக் செய்தீர்களா ?”

“டிக்கெட்டா ? எதற்கு ?”

“ஊருக்கு செல்ல வேண்டுமே !”

அலுவலகத்திலிருந்து கொண்டு வந்த வரை படங்களைப் பார்த்துக்கொண்டிருந்தவன், அவளை ஏறிட்டான். மீண்டும் படங்களைப் பார்த்தவாறு

“என்ன ? வீடு ஞாபகம் வந்துவிட்டதா ?” அவன் குரலில் கோபம் தெரிந்தது.

“அதில்லை! அத்தை பத்து நாளில் வரச் சொன்னார்கள் !”

மும்பை வரும்போது அவளுக்கு அவனைப் பிடிக்கவில்லையோ என்று கலங்கினான் . அப்படி இருக்காது என்று சமாதானப்படுத்திக்கொண்டான்.

ஒருவேளை அவளுக்கு இதுவரை பிடிக்கவில்லை என்றாலும் , அவளுக்குப் பிடித்த வண்ணம் இருக்க வேண்டும் என்று பார்த்துப் பார்த்து எல்லாம் செய்தான் . அவள் பெரிதாக எதையும் எதிர்பார்க்கவில்லை என்றாலும் , அவள் தனிமையாய் உணரக்கூடாது என்று தினமும் வெளியே கூட்டிச் சென்றான் . மீதம் இருக்கும் வேலைகளைக் கூட அவள் உறங்கிய பின் முடித்தான் . எல்லாம் செய்தும் ஒரு வாரத்தில் ஊருக்குச் செல்ல வேண்டும் என்று சொல்லவும் அவனுக்குக் கோபம் வரத்தான் செய்தது. ஆனால் விஜயா சொன்னதை வைத்துக் கொண்டு சொல்கிறாள் என்றதும் அவளை அருகில் அமர வைத்தேன் .

“அம்மா அன்று ஏதோ சும்மா சொன்னார்கள் . நீ ஏன் இன்னும் அதை நினைத்துக் கொண்டிருக்கிறாய் .”

“அவர்கள் சொன்னதுபோல் செய்தால் , அவருக்குத் திருப்தியாக இருக்கும் அல்லவா”

“அதெல்லாம் ஒன்றுமில்லை ! அம்மாவிடம் நான் பேசிக் கொள்கிறேன்.”

“உங்கள் ட்ரான்ஸ்பெர் என்னாயிற்று ?” என்றாள் மெதுவாக.

கையை கன்னத்தில் வைத்துக்கொண்டு “என் மனைவிக்கு என்மேல் இருக்கும் காதல் என்னைப் புல்லரிக்க வைக்கிறது. எல்லோரும் தனியாக இருக்கச் சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் என்று நினைப்பார்கள் . நீ மட்டும் தான் கிடைத்ததைத் தொலைக்க ஆர்வமாய் இருக்கிறாய் .” என்று பொருமினான்.

“வீட்டுக்கு வந்து கொஞ்ச நாளில் அத்தையிடம் கெட்ட பேர் வாங்க வேண்டாம் என்றுதான்.”

“அதெல்லாம் ஒன்றும் வாங்க மாட்டாய் !அதிகபட்சம் இன்னும் ஒரு வாரம் தான் .ஆர்டர் வந்து விடும்”

“நீங்கள் சொல்லவே இல்லை !” என்று ஆச்சரியப்பட்டாள் சாரு .

“முதலிலிருந்து நான் எதிர்பார்த்த நேரத்தில் வரவில்லை . இப்போதும் கையில் கிடைக்கும் வரும்வரை சொல்லக்கூடாது என்றுதான் நினைத்தேன் . நீ கேட்டதால் சொன்னேன் . அம்மா

உன்னிடம் கேட்டாள் இப்போதைக்குச் சொல்லாதே." என்றான்.

விஜயா தினமும் சாருவுடன் பேசுவதில்லை என்றாலும் பேசிய இருமுறை 'எப்போது வருகிறாய்?' என்று தான் கேட்டாள். மனோகரின் இடமாற்றத்தைப் பற்றிக்கூட அதிகம் கேட்க வில்லை.

விஜயாவின் எண்ணப்போக்கைக் கணிக்க சாருமதிக்கு ஒன்றும் சிரமாக இல்லை. எங்கே மகன் மும்பையிலேயே இருந்து விடுவானோ? என்று பயந்தாள். ஆனால் சாருமதி தான் காரணமாக இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருப்பது சாருமதிக்கு பெரும் மன உளைச்சலைத் தந்தது.

"அத்தை கேட்டால் என்ன சொல்வது ?" என்றாள் சாரு

"எனக்குத் தெரியாது என்று சொல்"

"அப்படி எப்படி அத்தையிடம் பேச முடியும்"

மனோகர் சிரித்துக்கொண்டே அவளின் தோள்களில் கை போட்டுக்கொண்டு , "என் கணவர் என்னிடம் எதுவும்

சொல்லவில்லை அத்தை ." என்று சொல் என்று சிரித்தான் .

"நான் வருவதைப் பற்றிக் கேட்டால் ?"

"அப்படி எல்லாம் கேட்க மாட்டார்கள்"

தன் அன்னை எதோ ஆதங்கத்தில் அன்று பேசி விட்டதாகவும் , அதை இப்போது மறந்திருக்கக் கூடும் என்றும் நினைக்கிறான். முன்பே விஜயா கேட்டதைக் கூறவும் , அவன் சிரிப்பு லேசாக மறைந்ததைச் சாரு கண்டுகொண்டாள் .

சொல்லாமல் இருந்திருக்க வேண்டுமோ என்று எண்ணினாள்.

சமாளித்துக் கொண்டு "நான் பேசுகிறேன்" என்று செல்லை எடுத்தான்.

அவன் பேசிவிட்டு ," நான் சொல்லிவிட்டேன். போதுமா!" என்றான்.

அவன் பேசியதிலிருந்து , விஜயா விடம் பேசவில்லை என்று தெரிந்தது . மீண்டும் இது பற்றிப் பேசி மனோகருக்குச் சங்கடத்தை ஏற்படுத்தக் கூடாது என்று நினைத்தாள் .

மனோகர் தன் தந்தையிடம் பேசிய பிறகு விஜயா சாருவுக்கு அழைத்து ஏதாவது சொல்வாள் என்று சாரு பயந்து கொண்டு தான் இருந்தாள்.

சாருவிடம் பேசவில்லை என்றாலும் அங்கேயே இருக்கும் இந்துவை என்ன சொல்வாளோ ?

மறுநாள் இந்துவுக்கு அழைத்தாள் . இந்து சாருவைப் போல் பெரிதாகப் பயந்து விட வில்லை . ஒருவேளை இது போன்ற பேச்சுக்கள் அவளுக்குப் பழகி இருக்கலாம் . “நீ தேவை இல்லாமல் பயப்படாதே ! நான் பார்த்துக்கொள்கிறேன் . மாமா இன்று தான் சொன்னார் . அவர் தான் உங்களை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டாரே . பிறகு எதற்குப் பயம் .”

சாருவிற்குப் புரிந்தது . மனோகர் பேசியபின் , சுந்தரம் அவரே மனோகர் சாரு இருவரும் மும்பையில் இருக்கும் படி சொல்லிவிட்டதாக , ஊரில் எல்லோரிடமும் கூறியிருக்கிறார்.

முதலிலிருந்த உற்சாகம் சாருவுக்குக் குறைத்துவிட்டது . விஜயாவின் மேலிருந்து பயமாக இருக்கலாம். மனோகரும்

சாருவின் சோர்வைக் கண்டுகொண்டான் . தன் அன்னைக்கு இவள் ஏன் இப்படிப் பயப்படுகிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது . மாமியார் என்றால் எல்லோரும் இப்படித்தான் பயப்படுவார்களா ?

சீக்கிரமே சாருமதிக்கு உற்சாகம் தரும் செய்தியுடன் மனோகர் வந்தான். அவனுடைய வேலை மாற்றம் உறுதியாகிவிட்டது. இன்னும் ஒரு வாரத்தில் சென்னையில் இருக்க வேண்டும்.

ஆடைகளைத் தவிர மற்ற பொருட்களை எல்லாம் இங்கிருக்கும் நண்பர்களை எடுத்துக் கொள்ளச் சொல்லி விட்டதாகக் கூறினான். வீட்டையும் இவர்கள் சென்ற பின் இவனுக்குத் தெரிந்தவர்களே வருவதாகக் கூறவும் , உரிமையாளரும் ஏதும் மறுப்பு சொல்லவில்லை . எல்லாம் சுலபமாக முடிந்தது.

மும்பை நகரப் பகுதியில் இருக்கும் நிர்வாக அலுவலகத்தில் இறுதி நாள் கொஞ்சம் வேலை இருக்கும் என்பதால் , இருவருக்கும் ஒன்றாகப் பயணம் செய்யும்படி இல்லாமல் , முதல் நாள் சாருமதியை விமானத்தில் ஏற்றிவிட்டு , மறுநாள் பணிகளை முடித்துக்கொண்டு மனோகர் கிளம்புவதாகவும் ஏற்பட்டு .

எல்லாம் இனி சரியாக நடக்கும் என்று சாருமதி உற்சாகமானாள் . நாம் நினைப்பதுபோலா எல்லாம் நடக்கிறது !

மாற்றத்திற்கான உத்தரவு வந்ததில் இருந்து மனோகர் பரபரப்பாக இருந்தான் . பல வேலைகள் இருந்தது அவனுக்கு. மதிய உணவருந்த கூட வரவில்லை. மாலையிலும் மிகவும் தாமதமாகவே வந்தான். அவனுடைய பொருட்கள் எதையும் இன்னும் எடுத்து வைக்கவில்லை . சாருவின் உடைகளை தவிர பெரிதாக எதுவும் இல்லை . ஆனால் மனோகரின் சாமான்கள் நிறையவே இருந்தது . நிறைய கோப்புகள் , வரைபடங்கள் . சாருமதியை முதலில் அதை தொட வேண்டாம் என்றவன் , அவனுக்கு எடுத்து வைக்க நேரம் இருக்காது என்று தோன்றவும் சாருவுக்கு அந்த வேலையை ஒப்படைத்தான். எந்த கோப்புகளும் காகிதங்களை கசங்கத்தவாறு பக்குவமாக எடுத்து வைக்க சொன்னான் .

கிளம்புவதற்கு இரு தினங்கள் இருக்கும் போது தான்

சொன்னான் . அவன் சொன்னது போல் அடுக்க ஆரம்பித்தாள் . வேலை சுலபமாக முடிவதாக இல்லை . அப்போதுதான் இந்து அழைத்தாள் . கையில் அலைபேசியை வைத்துக்கொண்டு கோப்புகளை சீராய் அடுக்க முடியவில்லை. சிறிது நேரம் தலையை ஒருபுறம் சாய்த்து பேசினாள். கழுத்து வலி எடுக்க, ஸ்பீக்கரை ஆன் செய்து அருகில் வைத்துவிட்டு பேசினாள்.

முதலில் அகிலனை பள்ளியில் சேர்ப்பது பற்றி பேசிக்கொண்டிருந்தவர்கள் எங்கெங்கோ சென்று, அகிலனின் பிறந்தநாள் மற்றும் இந்துவின் திருமண நாள் பற்றி பேசினார்கள் . இரண்டிற்கும் ஒரு வார இடைவெளியே .

“என்ன? ஷாப்பிங் எல்லாம் செய்த்தாயிற்றா ?”

“நீ வரட்டும் என்று தான் காத்துக்கொண்டிருக்கிறேன் . எப்போதும் தனியாகவே சென்று வருவேன் . இம்முறை நீயும் என்னோடு வரலாம் .”

“ஹ்ம்ம் ..எல்லா வீடுகளிலும் அக்கா தங்கை ஒன்றாக கடைக்கு சொல்வதெல்லாம் உப்பு பெறாத விஷயம் . அதை கூட இங்கே

அனுமதிப்பதில்லை.'' என்றாள் சாரு.

"இப்போது ஒன்னும் சொல்ல மாட்டார்கள்'' இது இந்து .

"அடடா ! ரொம்ப தாராளம் . இப்படி ஒரு வீட்டிற்கு கூட்டி வர நீயும் படாத பாடு பட்டாய் .''

முப்பது நாளில் ஒருவர் மேல் இருக்கும் அபிப்ராயம் இவ்வளவு மாறுமா ? சாருவுக்கு மனோகர் மீது முதலில் இருந்த எண்ணம் மாறி இருப்பதை இந்து நன்கு உணர்ந்திருந்தாள் . தனக்காக தங்கை பிடிக்காத வாழ்க்கையை ஏற்றுக்கொண்டாளோ என்று கவலை பட்டுக்கொண்டிருந்த இந்துமதிக்கு சாருவின் குரலில் இருக்கும் உற்சாகம், குறும்புத்தனம் எல்லாம் பெரும் நிம்மதியை அளித்தது . செல்லில் பேசும்போதெல்லாம் சாரு கணவனை பற்றி பெருமையாக பேசுகிறாள் என்பது இந்துவுக்கு பெரும் ஆறுதல். அவளை கேலி செய்ய வென்று முன்பு சாரு பிடித்த வீம்பை நினைவு படுத்துவாள் . அப்படியே ஒருவரை ஒருவர் கேலி செய்ய தொடங்கினர்.

"நான் என்ன செய்தேன் ! எல்லாம் இறைவன் அமைத்தது''

“செய்ததெல்லாம் நீயும்! அப்பாவும் ! என்னை மூளை சலவை செய்து கல்யாணத்துக்கு சம்மதிக்க வைத்துவிட்டீர்கள் . இல்லை என்றாள், இன்று நான் எப்படி இருந்திருப்பேன் தெரியுமா?எல்லாம் உன்னால் தான். உனக்காகத்தான். நினைவிருக்கட்டும்”

“எல்லாம் நினைவிருக்கிறது ! அப்போது நீ எப்படி எல்லாம் தட்டிக்கழித்தாய் , இப்போது எப்படி இருக்கிறாய் ! எல்லாம் என்னால் தான். உனக்கு எவ்வளவு கஷ்டம் . பிரியமில்லாமல் அங்கே இருக்கிறாய் அல்லவா?”

“உன்னை போல் என்னை புரிந்து கொள்ள யாரும் இல்லை !”

ஆமாம் எனக்கு மட்டும் தான் தெரியும் . நேற்று யாரோ கணவன் செய்து தந்த புலாவ் பற்றி பெருமையாக பேசினார்கள் ! அவள் பெற்றோரிடம் கூட அவ்வப்போது பெருவதாக சந்தோஷப்பட்டார்கள் !போன்-ஐ எடுத்தால் அவர் அப்படி,இப்படி என்று பெருமை பேசினார்கள் ! அவளை பற்றி உனக்கு தெரியுமா” என்று இந்து கேட்க “யார் அது ? எனக்கு தெரியாதே !” என்றாள் சாரு அப்பாவியாக .

“ஓ ! உனக்கு தெரியாது ?” என்றாள் இந்து . இங்கே சாருவின் முகத்தில் அவ்வளவு பெருமிதம் .அவள் கணவன் அவளை எப்படி பார்த்துக் கொள்கிறான் . இது அவளின் அதிர்ஷ்டம் .

இரு சகோதரிகளும் கேலி கிண்டலுடன் பேசினார்கள் என்பது அவர்கள் முகத்தை பார்த்து கொண்டிருப்பவர்கள் தவிர மற்றவர் வேறுவிதமாகத்தான் நினைக்கக்கூடும் .

வீட்டிற்கு சில கோப்புகளை எடுக்க வந்த மனோகர் இந்த பேச்சை முழுவதும் கேட்டிருந்தால் கூட பரவாயில்லை. தந்தையும் தமக்கையும் விருப்பமில்லா திருமணத்திற்கு சாருவை சம்மதிக்க வைத்திருக்கிறார்கள் என்பது மட்டும் அவன் மூலையில் பதிந்தது. அவன் இதுவரை அப்படி இருக்காது என்று தனக்கு பலமுறை சமாதானம் செய்து கொண்டு வந்தான். ஆனால் அவன் முதலில் நினைத்ததுதான் சரி. திருமணத்திற்கு முன் இவன் பேசிய போது அவளிடம் இருந்த ஒதுக்கம் , திருமணத்திற்க்கு பின் முதல் நாள் சாருவின் சோர்வு எல்லாவற்றிற்க்கும் இன்று அவனுக்கு விடை கிடைத்து விட்டது . சாருவுக்கு அவனை பிடிக்கவில்லை. வேறு

வழியின்றி திருமணத்திற்க்கு சம்மதம் சொல்லியிருக்கிறாள். வேறு வழியின்றி அவனை ஏற்றுக் கொண்டாள்.

அன்று வேறு பெண்ணுடன் இணைத்து பேசினாளே ! மனோகர் அப்போது கலங்கினாலும் ஏதோ சமாதானம் சொல்லிக்கொண்டானே ! எல்லாம் வீண்.

வெகு தாமதமாக வீடு வந்தான் . ஏற்கனவே சாரு உறங்கி விட்டாள். மெதுவாக சென்று படுத்துக் கொண்டான். உறக்கம் வரவில்லை. காலையில் அவள் செல்லில் வைத்திருந்த அலாரம் அடிக்கும் சத்தம் கேட்டது . அவள் எழுந்து செல்வது தெரிந்தது. இல்லை அவள் அருகில் தான் இருக்கிறாள் . உணரமுடிந்தது . அவன் போர்வையை சரி செய்து அவன் தலையை வருடிச் சென்றாள். அவள் அறையில் இல்லை என்றதும் கண்களை திறந்தான். பிடிக்காத ஒருவனிடம் இந்த பரிவு இருக்குமா ?

பெண்கள் தான் எல்லாவற்றையும் ஏற்கும் திறன் கொண்டவர்களாயிற்றே ! குடித்து விட்டு அடிக்கும் கணவனை கண்கண்ட தெய்வமாக பார்ப்பவர்கள் ஆயிற்றே .

அவன் எழுந்து முன்னறைக்கு வந்தான். அவள் பிரிட்ஜில் இருந்து ஏதோ எடுத்துக்கொண்டு அவன் வருவதை பார்த்தாள்.

"இரவு எப்போது வந்தீர்கள் ? என்னை எழுப்ப கூட இல்லை ! சாப்பிட்டீர்களா இல்லையா ? பசிக்கிறது என்றால் சொல்லுங்கள் இதோ தோசை ஊற்றுகிறேன்" . அவன் எதுவும் பேசவில்லை . அவன் முகத்தை பார்த்த சாரு , அருகில் வந்து அவன் நெற்றியை தொட்டு பார்த்தாள். அவன் முகம் மேலும் இறுகியது.

"ரொம்ப ஒரு மாதிரி இருக்கிறீர்கள் ! ரொம்ப வேலையா?"

"ஆம் !நான் சீக்கிரம் கிளம்ப வேண்டும் ! இரவும் தாமதம் ஆகும் . நாளை காலை உன் பிரயாணம் . எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொள் ."

"எல்லாம் ஆயிற்று ! உங்கள் கோப்புகளை கூட எடுத்து வைத்துவிட்டேன் இரண்டு நாட்களுக்கு தேவையானதை மட்டும் தனியே வைத்து இருக்கிறேன் ."

"ஹ்ம்ம்" அங்கிருந்து நகர்ந்தான். பிறகு அதிகம் பேசவில்லை

. மறுநாள் விமான நிலையத்தில் அவளை கொண்டு விட ஒரு வாடகை காரை வர வைத்திருந்தான். அவன் முகத்தில் சோர்வை அவள் கவனிக்காமல் இல்லை. செல்லும் வழியில் "கடைசி நாளில் கூடவா இப்படி வேலை வாங்குவார்கள்." சாரு மெல்ல அவன் கைகளைப் பற்றினாள். அவன் பார்வை இருவரின் கை சேர்ந்திருப்பதை பார்த்தன. அவனுக்கு அது ருசிக்கவில்லை.

மெதுவாக கையை விடுவித்துக் கொண்டான். சாருவுக்கு அவனின் சோர்வு மட்டும் இப்போது பெரிதாக தெரிந்தது. விமான நிலையத்தில் அவளை வழியனுப்பி வைத்துவிட்டு வீட்டிற்கு வந்தான். வீடு அவனுக்கு வெறுமையாக இருந்தது. இனி வரும் நாட்களும் இப்படித்தானா?

மறுநாள் வேலைகளை முடித்துக்கொண்டு அவன் சென்னை வீட்டை அடைந்தபோது எல்லோரும் மிக ஆர்வத்துடன் வரவேற்றனர்.

விஜயா "ஒரு வழியாக நம் வீட்டிற்கு வந்துவிட்டாய்! சீக்கிரம் குளித்துவிட்டு வா. எல்லோரும் சாப்பிடலாம்".

அவன் அறைக்கு செல்லவும் சாரு பின்தொடர்ந்தாள். “எல்லா வேலைகளும் முடிந்ததா!”என்றாள்.

“ஹ்ம்ம்”

“உங்கள் உடைகளை எல்லாம் எடுத்து வைத்துவிட்டேன். இன்னும் கொஞ்சம் இருக்கிறது. நாளை எடுத்து வைக்கிறேன்.”

அவன் எதுவும் சொல்லாமல் குளிக்க சென்றான். அவன் வெளியே வரும் போது அறை காலியாக இருந்தது.

உணவுக்கு பின்னும் சாரு எதோ பேச வந்தாள். அவன் களைப்பு என்று படுத்துவிட்டான்.

புது அலுவலகத்தில் சேர சில வேலைகள் செய்ய வேண்டும் என்று எப்போதும் தான் லேப்டாப்பில் எதோ செய்து கொண்டு இருந்தான்.

அவ்வப்போது சாரு வந்து அவன் என்ன செய்கிறான் என்று பார்த்துவிட்டு சென்றாள். தெரியாதவன் போல் மனோகர் கண்டுகொள்ளவில்லை.

அவன் யாரிடமும் பேசவில்லை . காலையில் சென்றால் இரவில் வீடு வருவான் . களைப்பு என்று உண்டுவிட்டு உறங்கிவிடுவான் . அவன் சரியாக சாப்பிடவில்லை என்று சாரு ஏதாவது சொன்னால் , "என்னை பார்த்துக் கொள்ள எனக்கு தெரியும்" என்றான்.

இவனுக்கு என்ன ஆயிற்று ! இப்படி ஏன் முகத்தில் அறைந்தால் போல் பேச வேண்டும் . நல்ல வேளை . அப்போது அருகில் யாரும் இல்லை . அவனிடம் சாரு பேச முயற்சிப்பது தெரிந்தும் அவளை தவிர்த்தான். ஒரு வாரத்திற்கு மேல் இப்படியே தான் இருந்தது. அகிலனின் பிறந்தநாள் என்று அக்காவும் தங்கையும் அவ்வப்போது வெளியே சுற்றினார்கள். மனோகருக்கு வேலை அதிகம் என்று பெரிதாக எதையும் நினைக்காமல் இருந்தாள். மனோகர் ஒதுக்கம் எல்லோர் கவனத்தையும் ஈர்த்தது

விஜயா ஒரு முறை அவனை அறைக்கு செல்ல விடாமல் பிடித்து கொண்டாள்.

"என்னடா இது ? நீ வீட்டில் இருப்பது போலவே இல்லை .

காலையில் எழுந்ததும் ஓடுகிறாய் . மாலையில் பொழுது சாய்ந்த பின் வருகிறாய். எங்களுடன் பேசக்கூட நேரம் இல்லையா உனக்கு"

"கொஞ்சம் வேலை அம்மா ."

"நல்ல வேலை ! இதற்க்கு தான் அப்பா அன்றே சொன்னார் . இந்த வேலை வேண்டாம் என்று . நமக்கு என்ன இல்லை. முதலில் வேலையை விடு . அப்பாவுடன் சென்று தொழிலை பார்த்துக்கொள் ."

"அம்மா ! ஆரம்ப கட்டத்தில் அப்பாவும் இப்படித்தான் வீட்டில் இருக்க நேரமில்லாமல் அலைந்தார் . அது போல் இதுவும் . இந்த நிலைக்கு வர நிறைய உழைத்திருக்கிறேன் . கொஞ்ச நாள் வரும் சிரமத்திற்காக வேலையை எல்லாம் விட முடியாது !"

மகன் கோபம் தாய்க்கு புரிந்தது . "சரி , இப்போது அதுபற்றி பேச வேண்டாம் . நீ கோபப்படாதே !"

மனோகர் எழுந்து சென்றான் . சாரு அங்கே தான் இருந்தாள் .அவளை ஒரு பார்வை பார்த்து விட்டு சென்றான் . விஜயா

பேசிய பின் அறையில் அடைதிருக்காமல் , விடுமுறை நாட்களில் எல்லோருடனும் சிறிது நேரம் கழித்தான் . ஆனால் சாருவிடம் ஒதுக்கம் காட்டினான் .

சாரு முதலில் வேலை பளு என்று எதுவும் பெரிதுபடுத்தவில்லை. ஆனால் அவள் பொறுமையை இழக்க தொடங்கியிருந்தாள் .

இன்று பேசிவிட வேண்டும் என்று எண்ணிக்கொண்டு , அவனிடம் சென்றாள் .

*“உங்களுக்கு என்னதான் ஆயிற்று ?”*

*“எனக்கென்ன !”*

*“சரியாக பேசுவது கூட இல்லை .”*

*“என்ன பேச வேண்டும் ?”* அவன் அவள் புறம் திரும்பி கூட பார்க்கவில்லை .

*“என்னிடம் பேச ஒன்றும் இல்லையா ?”*

“இல்லை” ஒரு கணம் கூட யோசிக்கவில்லை அவன் . யோசிக்காமல் எப்படி சொல்ல முடிந்தது . ஏன் ? யார் மேல் கோபம் ? அவனையே கேட்டுக்கொண்டான் . மெதுவாக அவள் முகத்தை பார்த்தான் . கண்களில் நீர் திரை . இவன் பேச முற்படும் போது அவள் அங்கிருந்து சென்றாள் .

அவளை காயப்படுத்தி விட்டேன் என்று அவனுக்கு வேதனைதான்.

இதை இனி தொடரக் கூடாது . அவளிடம் பேசி விட வேண்டும் என்று நினைத்துக்கொண்டான் .

அவனுக்கு தெரிய வேண்டியது சாரு உண்மையில் அவனை விரும்புகிறாளா ?இல்லை மற்றவர்களுக்காக ஏற்றுக் கொண்டாளா ? என்று தான் . அவளிடம் கேட்க வெகுநேரம் ஆகப்போவதில்லை . ஆனால் பயம் . ஒருவேளை அவள் மற்றவர்களுக்குத்தான் இதெல்லாம் என்று சொல்லிவிட்டால் ! அதை ஏற்க மனோகருக்கு நிச்சயம் முடியாது . அவள் மேல் கொண்ட காதலை செயல்களால் நிருபித்து அவள் காதலை சம்பாதிக்க அவனுக்கு தயக்கம் இல்லை.

ஆனால் ஒரு பெண்ணை கட்டாயத்தின் பேரில் அவனுக்கு திருமணம் செய்து வைத்தார்கள் என்பதை பெரும் அவமானமாக நினைத்தான். எப்படி அவளிடம் இது பற்றி பேசுவது என்று வெகுவாக யோசித்தான். என்னவானாலும் அவளை வெறுக்க அவனால் முடியாது .

எப்படியும் அவளிடம் பேச வேண்டும் என்று நினைத்து கொண்டு வீடு வந்தவனுக்கு வேறொரு செய்தி கிடைத்தது. இந்துமதி கருவுற்றிருப்பதாக சொன்னார்கள் . ஒரு வாழ்த்தை கூறிவிட்டு சாருவிடம் திரும்பினான். அவள் முகத்தில் கோபம் .இப்போது பேச அழைப்பது சரியாய் இருக்காது என்று யோசித்துக் கொண்டிருக்க , விஜயாவே சொன்னாள் ,'' உன் மாமனார் வீட்டிலிருந்து வருகிறார்கள். சீக்கிரம் சென்று தயாராகி வா . ''

அவன் அறைக்குச் செல்ல தினமும் அவனை பின் தொடரும் சாரு , இன்று வரவில்லை . அவன் தயாராகி வரும் போது ரங்கநாதனும் தாமரையும் வந்துவிட்டனர் .

சாரு அவன் முகத்தைக் கூட பார்க்கவில்லை. மற்றவர்களைக் கவனிப்பதிலேயே இருந்தாள். அவனுக்கு அவள் செய்கை சிரிப்பை வர வைத்தது. சிறுபிள்ளை போல் நடந்து கொண்டாள்.

இரவில் பேசலாம் என்று இவன் தொடங்கிய போது, "எனக்குத் தூக்கம் வருகிறது" என்றாள்

"அதிக நேரம் இல்லை." என்றான்.

"இன்று மட்டும் என்னிடம் பேச விஷயம் வந்துவிட்டதா? ஆனால் எனக்குக் கேட்க வேண்டும் என்று இல்லை" என்று படுக்கச் சென்றாள்.

அவன் விடுவதாக இல்லை. "சாரு! சாரி. நேற்று ஏதோ கோபத்தில் பேசிவிட்டேன்."

"நான் முட்டாள் இல்லை. நீங்கள் என்னிடம் இங்கு வந்ததிலிருந்து...இல்லை ..மும்பையில் கிளம்பும் கூட சரியாகப் பேசவில்லை. முதலில் வேலை இறுக்கம் என்று தான் நினைத்தேன். நேற்று ஒரு கணம் கூட யோசிக்காமல் சொன்னீர்கள், என்னிடம்

பேச எதுவுமில்லை என்று. எப்படிச் சொல்ல முடிந்தது .என் மேல் அவ்வளவு வெறுப்பு வந்து விட்டது . நான் என்ன செய்தேன் ? எனக்கு ஒன்றும் புரியவில்லை .''

''நீ நினைப்பது போல் ஒன்றும் இல்லை சாரு . நீ தேவை இல்லாமல் யோசிக்கிறாய்''

சற்று நேரம் அவனை உற்றுப் பார்த்தாள் . ''சரி அப்படியே இருக்கட்டும் .'' என்று படுத்துவிட்டாள் .

அவள் கோபம் கொஞ்சம் தணியட்டும் என்று அவன் அதற்கு மேல் பேசவில்லை .

# 10. பகுதி - 10

முதல் மூன்று மாதங்கள் என்பதால் தலைச்சுற்றல், குமட்டல் என்று வெகுவாக சிரமப்பட்டாள் இந்து . இது போதாதென்று அகிலன் அவளை வெகுவாக படுத்தினான் . வீட்டிற்கு இன்னொரு பாப்பா வரப்போகிறது என்றவுடன் பிள்ளைகளுக்கு வரும் அதே துடுக்கு . அவன் மேல் கவனம் இருக்கும் படி ஏதாவது வம்பு செய்தான். முதல் இரண்டு நாள் பார்த்துவிட்டு , விஜயா அகிலனை அருகில் இருக்கும் கிறீச்சில் சேர்க்கச் சொன்னாள் . அதைக் கேட்டு அவன் அழுது ஆர்ப்பாட்டம் செய்தான். அதன் பின் சாரு அகிலனை முழுவதும் பார்த்துக் கொண்டாள். பகலில் பெரும்பாலும் இந்துவின் அறையிலிருந்து அவனுக்கு ஏற்றவாறு ஏதாவது விளையாடுவது , எழுதச் சொல்லித் தருவது என்று செய்து வந்தாள் . அவ்வப்போது இந்துவுக்குக் குடிக்க ஏதாவது செய்வதென்றால் கூட அகிலனை உடன் அழைத்துச் சென்று விடுவாள் . ‘அம்மாவுக்கு நாம் ஜூஸ் போடலாம் ,அப்படியே

உனக்கு ப்ரூட் சலட்' என்று அவனுக்கு ஏற்றவாறு பேசி அவளுடன் வைத்துக்கொள்ளவே முயற்சித்தாள்.

அப்படி இல்லையென்றால் இந்துவிடம் ஓடிவிடுவான் . 'என்னைத் தூக்கு , ஆணை சவாரி கூடிப்போ' என்று இந்துவைத் தொல்லை செய்யத்தொடங்குவான். .

ராணி அம்மாவின் வேலை , மூன்று வேலை சமையல் செய்து காலை மாலை தேநீருடன் சிற்றுண்டி ஏதாவது செய்வது பாத்திரங்களைச் சுத்தம் செய்வது. அதற்குமேல் அறுபதுகளில் இருக்கும் அந்த பெண்மணியைத் தொல்லை செய்யச் சாருவுக்கு மனம் வரவில்லை . இடையில் உறவினர்களோ விருந்தாளிகளோ வந்தால் வீட்டுப் பெண்கள் தான் கவனித்துக் கொள்வது . வீட்டைச் சுத்தம் செய்ய வரும் பெண்ணும் அந்த வேலையைத் தவிர வேறு எதுவும் செய்ய மாட்டாள் . அதனால் சாருவுக்கு வேலை அதிகமாகி விட்டது .இந்துவுக்கு ஏதாவது நேரத்திற்குக் கொடுப்பது , அகிலனைச் சமாளிப்பது , இடையில் வருபவர்களைக் கவனிப்பது என்று பம்பரமாய் சுற்றினாள்.

இந்துவைப் பார்க்க வந்தாள் சுதா . சுதா வரும் சமயம் இந்து வெகுவாகவே ஓய்ந்திருந்தாள். வந்தவள் இந்து அறையை விட்டு அதிகம் வெளியே வரவில்லை என்று தெரிந்ததும், "உனக்கு வேலை செய்ய ஆள் இருக்கிறதென்று , படுத்தே இருக்கிறாய் . கொடுத்து வைத்தவள் தான் ." என்றாள்.

"பாவம் ! முதல் பிள்ளைக்குக் கூட இப்படி இல்லை . கொஞ்சம் சிறமப்படுகிறாள் . ஏதோ சாரு கவனித்துக் கொள்வதால் பரவாயில்லை . இல்லை என்றால் அவளை அம்மா வீட்டிற்குத் தான் அனுப்பி இருக்க வேண்டும் . இவளைப் பார்ப்பதை விட அகிலனைச் சமாளிப்பது தான் பெரும் பாடு . சாரு நன்றாகவே சமாளிக்கிறாள் ." என்றாள் விஜயா .

சாரு காதுகளை நம்ப முடியவில்லை . இரு மருமகளையும் குறை கூறாமல் தான் மாமியார் இப்படிப் பேசக்கூடும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் சுதாவுக்குப் பொறுக்க வில்லை .

"சாரு இல்லையென்றால் என்ன செய்வாளாம் . அவள் பிள்ளையைப் பார்க்கக் கூட முடியாதா ? எல்லாம் வேலை செய்ய

ஆள் இருக்கிற ஜம்பம்'' என்றாள் சுதா.

"அக்கா எப்போது வேலைக்குப் பயந்தது இல்லை. இப்போது தலைசுற்றல் இல்லையென்றால் அவள் சும்மா இருக்க மாட்டாள்'' என்றாள் சாரு.

சுதாவுக்கு அவள் பேச்சுக்கு எதிர் பேச்சு பிடிக்காது. அதனால் இந்து எப்போதும் அதைச் செய்வதில்லை. ஆனால் சாருவாள் அப்படி இருக்க முடியவில்லை. ஒருவேளை சுதா சொல்வது போல் இல்லை என்று மறுத்துப் பேசாததால், விஜயா இந்துவைக் குறை காணத் தொடங்கியிருக்கலாம் என்று சாரு நினைத்தாள். ஒருவேளை அப்படி இல்லை என்று மறுத்துப் பேசினால் விஜயாவும் உண்மையைப் புரிந்து கொள்ளலாம். குறைந்த பட்சம் சுதா சொல்வது முற்றிலும் சரி இல்லை என்று நினைக்கலாம்.

"உன் அக்காவுக்கு வக்காலத்தா! அவளைப் பற்றி எங்களுக்குத் தெரியாதா? அவள் சாதுவாக இருந்து கொண்டு என்னவெல்லாம் செய்வாள் என்று எனக்குத் தெரியும்''

சாரு சிரித்துக் கொண்டே "அப்படி என்ன அக்கா

செய்துவிட்டாள். நானும் தெரிந்து கொள்கிறேன்!'' என்றாள்.

இப்படி அவள் எதிர்க் கேள்வி கேட்பாள் என்று எதிர்பாராத சுதா ஒரு கணம் சற்று திணறினாள். ''ஏன்? உன்னை இந்த வீட்டிற்குக் கூடி வந்தது கூட அவள் திட்டம் தானே?. பிறகு உன்னிடம் சொல்லி மனோவை மாற்றத்திற்கு விண்ணப்பிக்காமலிருந்தது எல்லாம் உங்கள் இருவர் வேலை என்று எங்களுக்கு நன்றாகத் தெரியும்.''

சாருவுக்கு சலிப்பாக இருந்தது. ஒவ்வொரு முறையும் இந்த குற்றச்சாட்டு அவளுக்கு ஆத்திரத்தை வரவழைத்தது.

''ஏன் அண்ணி! அக்கா திட்டம் என்று அவ்வப்போது சொல்லகிறீர்களே? அத்தை மாமாவுக்கு ,இல்லை உங்கள் தம்பிக்கோ என்னை பிடிக்காமலா திருமணம் செய்த்துவைத்தீர்கள்? இன்னும் சொல்லப்போனால் மாமா தான் இந்த பேச்சை தொடங்கினார். இதில் அக்கா திட்டம் என்ன இருக்கிறது? சரி அதைக்கூட அக்கா மாமாவிடம் சொல்லி இருக்கலாம் என்று வைத்துக்கொள்ளலாம். அவர் மும்பையில் இருந்து இங்கே வரவேண்டாம் என்று நினைக்க என் அக்காவுக்கு என்ன காரணம்

இருக்கிறது ? என்னை இங்கே கூட்டி வருவது அவள் திட்டம் என்றால் , என்னையும் அவளுடன் வைத்துக் கொள்ளத் தானே நினைப்பாள் ! உலகம் முழுவதும் இருக்கும் ஒரு நிறுவனம் . அதில் நடக்கும் விவகாரங்கள் என்னவென்று என் அக்காவுக்கு எப்படி தெரியும்?''

“இவ்வளவு பேசுகிறாயே ? ஒருவேளை அம்மா உன்னை பத்து நாட்களுக்கு மேல் அங்கே இருக்க கூட என்று சொல்லாமல் இருந்திருந்தால் , நீங்கள் இன்னும் மும்பையில் தான் இருந்திருப்பீர்கள்.'' என்றாள் ஏளனமாக .

இதுவரை மென்மையாகவே பேசிக்கொண்டிருந்த சாரு , இப்போது பொறுமையாய் சுத்தமாய் இழந்தாள் .

“ட்ரான்ஸபெர் என்பது அரசாங்க வேலைகளில் நடப்பது போல் தான். சில மாதங்கள் ஆகும் . உங்கள் தம்பிக்கு மேல் இருக்கும் மூன்று மானேஜர்கள் கையெழுத்திட வேண்டும் .அதில் இரண்டு பேர் இந்தியாவிலேயே இல்லை . கொடுத்த வேலையை சிறப்பாக முடித்து , அவருக்கு பதில் வரும் புது அலை

அவரளவுக்கு தயார்படுத்தி , இதற்காக பல நாள் உறக்கமின்றி உங்கள் தம்பி செய்ததை , என்னையும் என் அக்காவையும் குறைகூற வேண்டுமென்பதற்காக , குறைத்து பேசாதீர்கள். இங்கே இருக்கும் பன்னாட்டு நிறுவனங்களின் நிர்வாகம் வேலை எல்லாம் எப்படி இருக்கும் என்று உங்களுக்கு தெரியும் . பேசுவதை யோசித்து பேசுங்கள் .''

''ஏய்! என் வீட்டில் நின்று கொண்டு என்னையே எதிர்த்து பேசுகிறாய் . உனக்கு எவ்வளவு தைரியம் !'' என்று சுதா சொல்ல, ''இது என் வீடும் தான்'' என்றாள் .

விஜயா சற்று அதிர்ந்து தான் போனாள் . ஒன்று சாரு பேசியதற்கு . இன்னொன்று மகனின் ட்ரான்ஸ்பெர் பற்றி பெரிதாக தெரிந்திருக்கவில்லை . ஒருவேளை விஜயா தேவையில்லமால் மகனுக்கு சிரமம் கொடுத்து விட்டோமோ என்ற கலக்கம். அவள் சுதாரிப்பதற்குள்

''பார் அம்மா ! எப்படி பேசுகிறாள் .'' என்று தன் அன்னையை துணைக்கு அழைத்தாள் சுதா.

“சரி, இந்த பேச்சை இதோடு விடுங்கள்” என்றாள் விஜயா.

இவர்கள் பேசுவது கேட்டு தூக்கத்தில் இருந்த இந்து மெதுவாக எழுந்தாள். அருகில் அகிலன் உறங்கிக் கொண்டிருந்தான். அவனை எழுப்பாமல் மெதுவாக வெளியே வந்தாள்.

சுதாவின் கோபத்தை பார்த்து , “என்ன அண்ணி ! என்ன ஆச்சு ?”

“பிள்ளையையும் கிள்ளி தொட்டிலையும் ஆட்ட வந்துவிட்டாயா ?” என்றாள் சுதா.

“இப்போது அக்கா என்ன செய்தாள் . நீங்கள் பேசினீர்கள் . பதிலுக்கு நான் பேசினேன்.” என்றாள் சாரு .

“ஏய் ! என்ன செய்தாய் ?”

“ஒன்றும் இல்லை அக்கா ! உன்னைப்போல் நானும் பேசாமல் இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள் அண்ணி . நான் அப்படி இல்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறேன்.”

“போதும் போதும் ! உங்கள் சண்டையை நிறுத்துங்கள். இதோ

பார் சாரு , சுதா நான் நினைத்துக் கொண்டிருந்தது தான் பேசினாள். அப்படி இல்லை என்று நீ சொன்ன பிறகு தெரிகிறது . அதோடு விடு . மேலும் பேசி சண்டையை பெரியாதைக்காதே .''என்றாள் விஜயா.

இப்போதும் சாரு விடுவதாக இல்லை . "அவர் வேலை உங்களுக்கு தெரியாமல் இருந்திருக்கலாம் அத்தை . ஆனால் எங்கள் திருமண விஷயம் பற்றி திரும்ப திரும்ப அண்ணி பேசுவதுதான் , வருத்தமாக இருக்கிறது .''

"அவள் எதோ ஆதங்கத்தில் பேசி விட்டாள் ! சுதா நீயும் இந்த விஷயத்தை இனி பேசாதே !'' என்று தன் அறைக்கு சென்றார் விஜயா.

சுதா முறைத்துக் கொண்டு நிற்பதை பார்த்து "அண்ணி! அவள் தவறாக பேசி இருந்தால் மன்னித்து விடுங்கள்'' என்றாள் இந்து .

"நான் தவறாக எதுவும் பேசவில்லை அக்கா ! உண்மையை அன்னிக்கு புரிய வைத்தேன் .அத்தை சொன்னதுபோல் இன்னொருமுறை இது பற்றி பேசாதீர்கள் .'' என்றாள் சாரு .

“என்ன! எச்சரிக்கிறாயா ? என் தம்பியை கைக்குள் போட்டுக்கொண்டு என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று நினைக்காதே . அதுவரை கிடைத்துவிடும் என்று சொல்லியிருந்த ட்ரான்ஸபெர் உன்னை பேசி முடித்த பிறகு தாமதம் ஆனது . நீ சொன்னதால் அவன் ட்ரான்ஸபெரை தள்ளிப்போட்டிருக்கலாம் .”

“நீங்கள் இதுவரை என்னை பற்றி சொன்னது பெரிதில்லை . உங்களுக்கு என்னைப் பற்றி தெரியாது ! பேசிவிடீர்கள் என்று வைத்துக் கொள்வோம் . உங்கள் தம்பியை நீங்கள் எப்படி தவறாக நினைக்கலாம் ? . திருமணம் கூட முடியாத ஒரு பெண் சொல்வதை கேட்டுக்கொண்டு பெற்றோரிடம் உண்மையை மறைக்கும் அளவுக்கு அவரை நீங்கள் குறைத்து பேசுவதை என்னால் ஏற்கமுடியாது .என்னை இழிவுபடுத்துவதாக நினைத்து உங்கள் தம்பியை தவறாக சொன்னால் நான் சுமை இருக்க மாட்டேன் . யாரை பற்றியும் நான் பொருட்படுத்தாமல் , தவறாக பேசியவர்களை நிச்சயம் கேட்பேன் . இதை எச்சரிக்கை என்று எடுத்துக்கொண்டாலும் சரி !”

சுதா தோல்வியை ஏற்றுக் கொள்வாள் என்று சாரு எதிர்பார்க்கவில்லை. செல்லும் முன் தன் அன்னையிடம் கண்ணீருடன் ஏதோ பேசிவிட்டு சென்றாள்.

விஜயா அப்போதே சாருவிடம் பேசியிருக்கலாம். ஆனால் மனோகர் வீட்டிற்கு வந்த பிறகு உணவருந்தும் போது , மெல்ல பேச்சை ஆரம்பித்தாள்.

"மனோ ! உன் மனைவியிடம் சொல்லிவை , சுதா வேறு வீட்டுக்கு போய் இருந்தாலும், அவள் நம் வீடு பெண். அவள் மனம் நோகும்படி நடந்து கொள்ள வேண்டாம் என்று . இன்று வந்தவள் சங்கடத்துடன் திரும்பி சென்றாள்."

உணவு பரிமாறிக் கொண்டிருந்த சாரு , மனோகரின் பக்கம் திரும்பினாள். அவனும் அவளை ஒரு முறை பார்த்தான். சுந்தரம் ,"என்ன நடந்தது ?" என்றார் . "ஒன்றும் பெரிதாக இல்லை . சிறிய வாக்குவாதம் தான் . ஆனால் நம் வீடு பெண்ணை நாமே நோகடிக்க கூடாது என்று தான் சொல்கிறேன்." இப்போது விஜயா பேசியது சாறு தான் குற்றவாளி என்று சொல்லாமல் சொன்னது

போல் இருந்தது .

இதை இப்படியே விடக்கூடாது என்று “ஒன்றும் இல்லை மாமா ! என்னை இங்கே மருமகளாக கொண்டுவந்தது அக்காவின் திட்டம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் அண்ணி . விளையாட்டாக சொன்னாலும் கேட்பவர் வேறுவிதமாக நினைக்க கூடும் என்று இனி அப்படி சொல்லாதீர்கள் என்றேன் . அன்னிக்கு அதனால் கோபம் .” என்றாள் சாரு .

விஜயாவுக்கு சற்று பதறியது , ஒருவேளை மும்பையில் சாரு அதிக நாள் இருப்பது பற்றி எதுவும் பேசி விடுவாளோ என்று பயந்தாள் . ஆனால் அவள் அதை பற்றி பேசவில்லை .அதற்குள் சுந்தரம் ,” கேலி பேசினாள் என்று உனக்கே தெரிகிறது . பிறகு ஏன் அவளை காயப்படுத்துகிறாய் . இனிமேல் அப்படி நடக்காமல் பார்த்துக் கொள் .” என்றார் சுந்தரம் .

“சரி மாமா”.

“இதை ஒரு விஷயம் என்று மனோவிடம் நீ சொல்கிறாய் ! நீயே சாருவிடம் சொன்னால் போகிறது !” என்றார் சுந்தரம் விஜயாவை

பார்த்து .

இந்து அனைவரும் படுக்க சென்ற பின் , மெதுவாக சாருவை தேடி வந்தாள். அகிலனுக்கு பாலை காட்சி கொண்டிருந்தாள் சாரு.

“சாரு ! வேலை முடிந்ததா ?”

“இதோ இந்த பாலை உனக்கும் அகிலனுக்கு கொடுத்தால் முடிந்தது .” என்றாள்.

“சாரு , இன்று போல் நடக்காமல் பார்த்து கொள் .”

சாரு ஓரக்கண்ணால் இந்துமதியை பார்த்தாள் . தன் சகோதரி எதைப்பற்றி கூறுகிறாள் என்று தெரிந்தும் தெரியாதவள் போல் , ” இன்று என்ன நடந்தது ?”

“இன்று போல் என்றும் இருக்காது . சுதா இந்த வீடு செல்லப்பெண் . அவளை எதாவது சொன்னாள் எல்லாருக்கும் கோவம் வரும் .”

“வந்தா வரட்டும் ! அதற்கு அவள் பேசுவதை எல்லாம் கேட்டுக் கொண்டிருக்க முடியாது .”

“பார் சாரு ! நம் இருவர் நன்மைக்காகத்தான் சொல்கிறேன் . பேசாமல் விட்டு விடு”

“உன்னை போல் நான் இருக்க மாட்டேன் . அது உனக்கும் தெரியும் .” என்றாள் கோபமாக .

“ஏய் ! சொல்வதை கேள். இப்படி வீம்பு பிடித்தாள், உனக்கும் மனோகருக்கும் இடையே தேவையில்லாத விரிசல் வரும் .”

மனோகர் பெயர் சொன்னதும் அவள் கோபம் தலைக்கேறியது . “நம்மை பிடித்தவர்களுக்கு நம்மை புரியும் . பிடிக்காதவர்களுக்கு என்ன சொன்னாலும் புரியாது, என்ன செய்தாலும் பிடிக்காது . நீ சொல்வது போல் நடந்து கொண்டால் தான் மனோவுக்கு பிடிக்கும் என்றால் , அவருக்கு பிடிக்காதவளாகவே இருந்துவிட்டு போகிறேன் .” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள் .

அறைக்கு சென்றால் இவளுக்காக மனோகர் காத்திருந்தான் . இவள் எதுவும் பேசாம படுக்க செல்ல , “இன்னைக்கு என்ன நடந்தது ?”

“ஒன்றும் இல்லையே !”

“அம்மா சொன்னது பற்றி கேட்கிறேன்”

“அதுதான் அம்மா சொல்லி விட்டார்களே !” என்று நகர்ந்தாள்

.

“சாரு ! நான் இன்னும் பேசி முடிக்கவில்லை ! பேசும்போது இப்படி நகர்ந்து செல்வது எனக்கு பிடிக்கவில்லை.”

“இன்னும் வேறென்ன உங்களுக்கு பிடிக்காது ? பட்டியலிட்டு சொல்லுங்கள்.”

“முதலில் இப்படி தேவையில்லாமல் கோபப்படாதே ! நான் சொல்வதை கேள். இப்படி உட்கார்.”

பேசாமல் அமர்ந்தாள். ஆனால் அவள் மனம் எரிமலையை வெடிக்க தயாராக இருந்தது. இன்று நடந்தது அவள் குற்றம் போல் விஜயா சொல்லிவிட்டாள். நடந்தது இதுதான் என்று உடைத்து சொல்லாமல் இவளும் எல்லோர் முன்னும் பூசி மெழுகி சுதாவின் மேல் தவறில்லை என்பது போல் சொன்னாள். உண்மையை

உடைத்து பேச ஏன் அவள் தயங்கினாள் ? அவள் மேல் அவளுக்கு கோபம் . பல நாட்கள் மனோகர் பேசாமல் இருந்தது . இப்போது இந்து சொன்ன அறிவுரை. எல்லாம் அவள் எரிச்சலை அதிகமாகியது .

“என்ன நடந்தது என்று தானே கேட்டேன் ? சுதா என்றால் இங்கே அனைவருக்கும் பிரியம் அதிகம் . அவள் ஏதாவது பேசினால் கண்டுகொள்ளாதே ?”

“ஏன் ?”

“தேவையில்லாத சண்டைகள் வேண்டாம் சாரு . பேசாமல் இருந்து விட்டுப் போனால் யாருக்கும் சங்கடம் இல்லை”

“மற்றவர்களுக்காக நீங்கள் முடிவெடுக்காதீர்கள் . உங்கள் அக்காவின் பேச்சு எனக்குச் சங்கடத்தைத் தருகிறது என்றால் ?”

“அவள் கேலி செய்வதை நீ பெரிது படுத்தாதே !”

“கேலியா ! உங்கள் அக்கா பேசியதைக் கேட்டீர்களா ? கேலியாய் தான் பேசினாள் என்று உங்களுக்கு எப்படித் தெரியும் ?”

“நீ தானே சொன்னாய் !”

“நீங்கள் சொன்ன அதே சங்கடத்தை மனதில் எண்ணித் தான் நான் அப்படிச் சொன்னேன். ஒவ்வொரு முறையும் நம் திருமணம் எதோ எங்கள் வீடு திட்டம் போடு செய்தது போல் பேசுகிறார்கள். ஒரு முறை சொன்னால் கேலி. மீண்டும் மீண்டும் சொன்னால். அதுவும் இந்துவின் திட்டம் என்று சொல்கிறாள்.”

“அவள் சொன்னால் சொல்லட்டும் ! யாரும் அதைப் பெரிதாக நினைக்கவில்லை”

“நினைக்கவில்லை ! ஏனென்றால் அது எனக்கும் இந்துவுக்குத் தான் கேவலம். உங்களுக்கு இல்லை !”

“என்ன உளறுகிறாய் !”

“சுதா சொன்னதின் பொருள் புதிதாகக் கேட்பவர்களுக்குக் கேலியாக இருக்காது. ஏதோ என் அக்கா சொல் கேட்டு நான் உங்களை மயக்கி திருமணம் செய்து கொண்டது போல் இருக்கும்.”

“ஏய் ! பைத்தியம் மாதிரி கற்பனை செய்யாதே !”

“கற்பனை செய்கிறேனா ? சுதா பேசுவதைக் கேட்பவர்கள் இப்படித்தான் கற்பனை செய்வார்கள் . அதனால் அப்படிப் பேச வேண்டாம் என்றேன் . அதற்கு உங்களுக்கு என் மேல் கோபம் வந்தாலும் எனக்குக் கவலை இல்லை .”

அதுவரை பொறுமையாகப் பேசிக்கொண்டிருந்த மனோகருக்கு அவள் இறுதியாகச் சொன்னது சட்டென்று தைத்தது .

“அது தான் தெரியுமே ! காதல் என்பது இருக்கும் இடத்தில் தான் கோபம் வெறுப்பு வரக்கூடாது என்றா நினைக்கத் தோன்றும் .”பேசிவிட்டு அவன் அங்கிருந்து சென்றுவிட்டான் .

இவன் என்ன சொல்கிறான் . அவளுக்கு மனோ மேல் காதல் இல்லை என்றா ? அவன் அக்காவிடம் ஒரு வார்த்தை சொன்னால் இவன் மேல் காதல் இல்லை என்று அர்த்தமா ? ஒருவேளை இந்து சொன்னதுபோல் , எதுவும் பேசாமல் அமைதியா பொறுத்துக் கொண்டாள் தான் இவனுக்குக் காதல் இருப்பதாக அர்த்தமா ? இவள் உணர்ச்சிக்கு மதிப்பு இல்லையா ? இவளை அவமானப்படுத்தினால் இவனுக்கு ஒன்று இல்லையா ? ஒருவர்

சொல்வது போல் அப்படியே நடந்து கொண்டால் மட்டும் தான் காதல் குறையாமல் இருக்குமா?

அப்படி என்றால் மனோவிற்கும் இப்போது இவள் மேல் காதல் இல்லையா?

ஆனால் அவளுக்கு அப்படி இல்லையே ! அவன் பேசாமல் இருந்த போது கூட அவன் பக்கம் ஒரு நியாயத்தைத் தேடிப் பிடித்துக் கொண்டாள்! 'உன்னிடம் பேச ஒன்றும் இல்லை என்ற போதும் கோபம் வந்ததே தவிரக் காதல் குறையவில்லையே அவளுக்கு !"

இரவு வெகு நேரம் அழுததால் காலையில் முகம் வீங்கினால் போல் இருந்தது . என்ன செய்தும் முகத்தைச் சீராக்கச் சாருவாள் முடியவில்லை . ராணியம்மா அவள் முகத்தை ஆராய்வது தெரிந்து . "சளி பிடித்துவிட்டது . மதியம் கொஞ்சம் மிளகு ரசம் வைத்துக் கொடுங்கள்." என்றாள் . அதற்கு மேல் எதுவும் கேட்கவில்லை. ஆனால் விஜயாவிடமும் இந்துவிடமும் அப்படி எளிதில் தப்பிக்க முடியவில்லை .

"என்ன திடீரென்று ! ஏதும் குளிர்ச்சியாக சாப்பிட்டாயா ?"

என்றாள் விஜயா.

"நேற்று தலையைச் சரியாக உளதார்த்த வில்லை அத்தை . அதனால் என்று நினைக்கிறேன்"

"மாத்திரை ஏதும் இருக்கிறதா ? இருந்தால் உடனே போட்டுக்கொள் !" என்று சொல்லிவிட்டுப் போனாள் விஜயா .

இந்துவுக்குப் புரிந்தது . இது ஜலதோஷம் இல்லையென்று . அதிகம் கேட்கவில்லை என்றாலும் "நேற்று நான் சொன்னதை யோசி. புரிந்து நடந்துகொள்!" என்றாள்.

நேற்று என்றதும் இந்து பேசியதா நினைவுக்கு வரும் ? மனோகர் பேசியதல்லவா நினைவில் இருக்கிறது . அதை நினைத்தால் அவளுக்கு மீண்டும் அழுகை வந்தது . இந்துவிடம் இன்று அகிலனைப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு அறைக்குச் சென்று அதுவரை கட்டுப்படுத்தி வைத்திருந்த அழுகையை அழுது தீர்த்தாள் . எவ்வளவு அழுதாலும் கண்ணீர் குறைவதாகத் தெரியவில்லை . மதிய உணவின் போது

மீண்டும் விஜயா “ரொம்ப முடியவில்லை என்றால் , மணியை வரச்சொல்கிறேன். மருத்துவரிடம் சென்று வா” என்றார்.

அப்போது பார்த்து அகிலன் ஒரு தும்மலைப் போட்டான் . பதறிய விஜயா ,” எதற்கும் இன்று நீ நன்றாக ஓய்வெடு . இந்துவுக்கோ பிள்ளைக்கோ ஒட்டிக்கொள்ளப் போகிறது !” என்றாள்.

அறைக்குச் சென்று சிறிது நேரத்தில் அவளுக்கு ஒன்று தோன்றியது . இங்கே இருப்பதை விட அம்மா வீட்டிற்குச் சென்று விட்டால் , இரண்டு நாள் தனியாக இருக்கலாம் . இங்கே இவர்களைச் சமாளிப்பதைவிட அம்மாவைச் சமாளிப்பது சுலபம் . விஜயாவிடம் “அகிலனை ஒரு வீட்டுக்குள் இருந்து கொண்டு என்னிடம் வராதே என்றால் அவன் கேட்க மாட்டான். அவனுக்கு வந்தால் இந்துவுக்கு ஒட்டிக்கொள்ளும். இரண்டு நாள் நான் அம்மா வீட்டிற்குச் சென்று விட்டு வருகிறேன்” என்றாள்.

வித்யாவுக்கும் அதுவே சரி என்றுபட , முழுவதும் குணமாகும் வரை இருந்துவிட்டு வரும் படி கூறினார்.

அவளும் கிளம்பிவிட்டாள் . மனோகர் மாலை வீடு வந்ததும் தான் தெரிந்தது .மனைவி ஒருவார்த்தை கூட அவனிடம் சொல்லாமல் சென்று விட்டாள் . அது மட்டுமின்றி ஒரு சிறிய சண்டைக்கு இப்படி அம்மா வீட்டுக்குச் சென்றது மனோகருக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை . அவளிடம் பேச அவன் முயற்சிக்கவில்லை.

இரண்டு நாட்கள் ஆகியும் சாருவும் வரவில்லை , மனோகரும் கேட்கவில்லை .

இரண்டு நாட்களாய் மகள் அறைக்குள் அடைத்துக் கிடைக்கத் தாமரை கண்டுகொண்டாள் . கணவனுடன் சண்டை போட்டு வந்திருக்கிறாள் என்று . முதலில் இந்து விடம் கேட்கவும் பெரிதாக ஒன்றும் இல்லை என்று விட்டாள் . தாமரைக்குச் சமாதானம் சொன்னாலும் , இந்துவுக்குக் கவலையாக இருந்தது .சாருவிடம் பேசலாம் என்றாள் அவள் பேசத் தயாராக இல்லை .

மனோகரனிடம் பேசலாம் என்று நினைத்தால் அவன் வருவதும் தெரியவில்லை போவதும் தெரியவில்லை .

சரியென்று அவன் செல்லுக்கு அழைத்தாள் இந்து . அகிலனும் உறங்கிவிட்டான் . விஜயாவும் மதியத்தில் ஓய்வெடுக்கும் நேரம் தான்.

வீட்டு எண்ணைப் பார்த்ததும் உடனே மனோகர் பேசினான் .

"ஹலோ ! நான் இந்து பேசுகிறேன்"

இதுவரை எப்போதும் இவனிடம் பேச இந்து அழைத்ததில்லை . தன் தங்கையைப் பற்றிப் பேசத்தான் அழைத்திருக்க வேண்டும் .

"சொல்லுங்கள் அண்ணி ."

"உங்களுக்கு வேலை என்றால் பிறகு பேசலாம் ."

"சொல்லுங்கள் ."

"உங்களுக்கும் சாருவுக்கு ஏதோ பிரச்சனை என்று தெரிகிறது . அதில் நான் தலையிட முடியாது . ஆனால் இரண்டு நாட்களாக அவள் அம்மா வீட்டில் இருப்பது சரியில்லை ."

“நான் அவளைப் போகச் சொல்லவில்லை.”

“நீங்கள் சொல்லவில்லை ! உங்களுடன் சண்டை போட்டுக் கொண்டுதான் போயிருக்கிறாள்”

“அதெல்லாம் ஒன்றும் இல்லை. அவளுக்கு உடல் நலம் சரியில்லை. சரியானதும் வந்துவிடுவாள்.”

“அவள் உடலுக்கு ஒன்றுமில்லை என்று எனக்கும் தெரியும். உங்களுக்கும் தெரியும். உங்களுக்கு என்ன பிரச்சனை என்று எனக்கு நிச்சயமாய் தெரியாது. ஒருவேளை இது சுதா அண்ணி விஷயத்தால் என்றால் இனிமேல் அது நடக்காமல் நான் பார்த்துக்கொள்கிறேன் . அவளை அதற்காக மன்னித்துவிடுங்கள். அவள் சிறு பெண். எப்போதும் துடுக்காய் பேசுவாள். ஆனால் மிகவும் நல்ல பெண் . உங்களுக்கே தெரிந்திருக்கும். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். இப்போதைக்கு வீட்டில் யாருக்கும் தெரியவில்லை. தெரிந்தால் எல்லோரும் வருத்தப்படுவார்கள் .” இந்து பேசிக்கொண்டே போனாள்.

மனோகருக்குச் சட்டென்று தோன்றியது . இப்படிப்

பேசித்தான் இந்து சாருவைச் திருமணத்திற்குச் சம்மதிக்க வைத்திருப்பாளோ ?

அவன் நினைத்தது மட்டுமின்றி கேட்டுவிட்டான் . இந்து "நீங்கள் எதைப் பற்றிச் சொல்கிறீர்கள் ?"

"அண்ணி , எனக்குத் தெரியும் நீங்கள் சாருவைக் கட்டாயப்படுத்தி திருமணத்திற்குச் சம்மதிக்க வைத்தது . நீங்கள் எதற்காகச் செய்தீர்கள் என்று எனக்குத் தெரியாது . ஆனால் கட்டாய திருமணத்தில் சாருவுக்கு என்ன சந்தோசம் இருக்கும் ."

"சாருவைத் திருமணத்திற்குச் சம்மதிக்க வைத்தோம் ஆனால் யாரும் கட்டாயப்படுத்தவில்லை ."

"இரண்டிற்கும் என்ன வித்தியாசம் ?"

"பிடிக்காத ஒருவரைத் திருமணம் செய்து வைப்பது கட்டாயப்படுத்துவது . ஏதோ சிறு பிள்ளை தனமாக திருமணம் வேண்டாம் என்றவளிடம் , நல்லது கெட்டது சொல்லிச் சம்மதிக்க வைப்பது வேறு .சாரு என்றுமே உங்களைப் பிடிக்கவில்லை என்று

சொல்லவில்லை . அப்படி சொல்லிருந்தால் யாரும் அவளைச் சம்மதிக்க வைக்க முயற்சி செய்திருக்க மாட்டோம்.''

''வேறு என்ன காரணத்தால் சாரு திருமணத்தை மறுத்தால் ?'' என்று மனோகர் கேட்க இந்துவுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை . உண்மையைச் சொல்வதென்றால் இவன் அன்னையையும் அண்ணனையும் தவறாகச் சொல்ல வேண்டும்!

அவள் தயங்குவதைக் கவனித்து ,''உண்மையை மறைக்க ரொம்ப கஷ்டப் படாதீர்கள் . சாருவுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்று எனக்குத் தெரியும்'' என்றான் மனோகர் .

''உண்மையைச் சொல்லக் கொஞ்சம் தயக்கம் தான் . ஆனால் நீங்கள் நினைப்பது போல் இல்லை .''

''அவள் உங்களுக்காக இந்த திருமணத்திற்குச் சம்மதித்தாள் . ஒருவேளை அவள் வேண்டாம் என்று சொன்னால் உங்களுக்கு இங்கே பிரச்சனை என்று சம்மதித்தாள். சரிதானே !'' அவன் குரலில் வெறுமை இந்துவை மிகவும் கலங்க வைத்தது . இந்து இனியும் சொல்லத்தயங்கினாள் சாருவை மனோகர் வெறுத்துவிடுவான். அது

நடக்கக் கூடாது .

“நான் சொல்வதை நீங்கள் எப்படி எடுத்துக் கொள்வீர்கள் என்று தெரியாது ! சாருவுக்கு அத்தை மேலும் உங்கள் அண்ணன் மீதும் வருத்தம். உங்கள் அண்ணனைப் பற்றி உங்களுக்குத் தெரியும். அவர் என்றும் என் பெற்றோரிடம் சரியாகப் பேசுவது கூட இல்லை . எங்கள் இருவரைத் தவிர எங்கள் பெற்றோருக்கு யாரும் இல்லை . ஒரு வேலை நீங்களும் அப்படி இருந்தால் அவர்களின் வாழ்க்கை மிகவும் வெறுமையாகி விடும் என்று சாரு பயந்தாள்.”

“அண்ணி , நீங்கள் சொல்வதை எல்லாம் ஏற்கிறேன். ஆனால் அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்பது தான் உண்மை .” என்றான் மனோகர்.

“உங்களுக்கு இந்த ஒரு சண்டையால் அப்படித் தோன்றி விட்டதா ?” என்றாள் இந்து பதட்டத்துடன்.

“இந்த சண்டை வெறும் சாக்கு அவளுக்கு . இல்லை என்றால் சொல்லாமல் வீட்டை விட்டு சென்றிருக்க மாட்டாள்.”

“உங்கள் சண்டையால் தான் அவள் சென்றாலே தவிர ..” என்று இந்து பேசிக்கொண்டிருக்க ,“போதும் அண்ணி அவள் இந்த திருமணத்தை ஒத்துக் கொண்டதே உங்களுக்காகத்தான் . அவள் இனிமேல் என்னுடன் வாழ்தலும் அது உங்களுக்கு தான் இருக்கும் . இதை நான் எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும் . நீங்களே சொல்லுங்கள்” என்றான் மனோகர் .

இந்துமதிக்கு வெகுவாக வலித்தது . ஆனால் மனோகருக்கு எப்படி இதெல்லாம் தெரியும் ?

“என்னை மன்னித்து விடுங்கள் ! நீங்கள் சொல்வது எனக்கு புரிகிறது . நானும் பலமுறை சாரு சந்தோஷத்தை கொடுத்து விட்டோமோ என்று கலங்கியது உண்டு . ஆனால் அவள் உங்களுடன் சந்தோஷமாக இருக்கிறாள் என்று எனக்கு நிச்சயம் தெரியும் . நீங்கள் சொல்வது போல் அவள் எனக்காக மட்டும் இந்த வீட்டில் இருந்திருந்தால் , வந்த புதிதில் எனக்கு சங்கடம் வரும் என்று பார்த்து பார்த்து நடந்துகொண்டவள் , இப்போது எதையும் யோசிக்காமல் அண்ணியிடம் சண்டை போட்டிருக்க

மாட்டாள். உங்கள் ஒருநாள் சண்டைக்கு அவ்வளவு அழுதிருக்க மாட்டாள். இல்லாத காய்ச்சலை இருப்பதாக சொல்லி அம்மா வீட்டுக்கு போயிருக்க மாட்டாள். இரண்டு நாட்களாக யாருடனும் பேசாமல் இருந்திருக்க மாட்டாள். இதோ இந்த பத்து நாள் எனக்காக பார்த்து பார்த்து செய்து கொண்டிருந்தாள். இப்போது எல்லாவற்றையும் மறந்து போயிருக்க மாட்டாள். அவள் என்னை அலட்சியம் படுத்தியதற்கு இவ்வளவு சந்தோசப்படுவேன் என்று நான் நினைக்கவே இல்லை. அவளுக்கு நாங்கள் முக்கியம், ஆனால் உங்களுக்கு பிறகுதான் நாங்கள் எல்லாம்.''

''சுதா அண்ணியுடன் அவள் கடுமையாக பேசினாள் தான் . ஆனால் உங்களை ஒரு வார்த்தை குறையாகச் சொன்னார் என்பதற்காகத்தான் அவள் அதிகமாக பேசினாள்''.

இரு முனையில் சிறு மௌனம். ''யோசியுங்கள்! அகிலன் எழுந்துவிட்டான். நான் வைக்கிறேன்.''

# 11. பகுதி - 11

அதற்குமேல் அவன் அலுவலகத்தில் நிற்கவில்லை . எல்லாவற்றையும் இன்றே சாருவிடம் பேசிவிட வேண்டும் . நேரே அவள் வீட்டிற்கு சென்றான் . அவன் அழைப்பு மணியை அழுத்தவும் , தாமரை தான் வந்தாள் . முதலில் மனோகரை பார்த்து ஆச்சரியம் . முன்மாலை நேரம் . இப்போது இங்கே ? என்று யோசித்தவாறு கதவை திறந்தாள் .

“வாருங்கள் மாப்பிள்ளை” என்று வரவேற்றாள்

அவள் எதுவும் கேட்கும் முன் “சாரு இப்போது எப்படி இருக்கிறாள் ? பார்க்கலாம் என்று வந்தேன்” என்றான் .

“அவளுக்கு ஒன்றும் இல்லை. நன்றாகத்தான் இருக்கிறாள் . உட்காருங்கள் . குடிக்க ஏதேனும் எடுத்து வருகிறேன் .” என்று சாருவின் அரை கதவை தட்டினாள் .

“சாரு வெளியே வா !”

“அம்மா ! கொஞ்சம் என்னை நிம்மதியாக இருக்க விடு . எனக்கு ஒன்று வேண்டாம் .” குரல் வேறு மாதிரி இருந்தது . அழுத்திருக்கிறாள் என்று புரிந்து கொண்டான் .

“ஏய் ! மாப்பிள்ளை வந்திருக்கிறார்”. மனோகர் எழுத்து கதவருகே வர , தாமரை நகர்ந்தாள் .

சாரு கதவை திறந்த போது மனோகர் தான் நின்றிருந்தான் .

அவள் கண்களில் மீண்டும் நீர் திரை . நேரே சென்று படுக்கையில் அமர்ந்தாள் . அவன் மெதுவாக அருகில் வந்தமர்ந்தான் .

“வர ஏன் இரண்டு நாள் ஆனது ?” என்றாள் மூக்கை உறிஞ்சியபடி .

“நீ ஏன் என்னிடம் சொல்லாமல் வந்தாய்”

“எனக்கு கோபம்”

“எனக்கும் தான் . இப்போதாவது நான் வந்தேன் . அம்மையார் நான் வரவில்லை என்றால் இப்படியேதான் இருந்திருப்பீர்கள் .

என்னுடன் பேசக்கூட தயாராக இல்லை.”

அவன் முகத்தை பார்த்து “நீங்கள் தான் முதலில் என்னிடம் பேச ஒன்றும் இல்லை என்றீர்கள்”. மனோகர் மௌனமாக இருந்தான்.

“சொல்லுங்கள், யார் முதலில் ஆரம்பித்தது?”

“நீதான்!”

“நானா! நான் என்ன செய்தேன்?”

“நீதான் வேறு வழியின்றி என்னுடன் இருப்பதாக சொன்னாய்.”

“நான் எப்போது சொன்னேன்?”

“உன் அக்காவுடன் போனில் பேசி கொண்டிருந்தாய்!” அவள் புரியாமல் யோசிக்க, “மும்பையில் கிளம்பும் முன் தினம்!” என்றான்.

யோசித்து விட்டு, “ஐயோ! நாங்கள் விளையாட்டாய்

பேசிக்கொண்டிருந்தோம்."

"விளையாட்டா ? வேறு பெண்ணுடன் எனக்கு திருமணம் செய்திருக்கலாம் என்று சொன்னது ?"

மீண்டும் யோசித்துவிட்டு , "அது , சுதா மேல் இருந்த கோபத்தில் . எல்லாவற்றிற்கும் நாங்கள் திட்டம் போட்டு செய்ததாய் பேசிக்கொண்டிருந்தாள் . அதனால்தான் ஒரு நாள் சுமாவையே உங்களுக்கு திருமணம் செய்து வைத்திருக்கலாம் என்று சொன்னேன்.ஆனால் அப்போது அக்கா என்னை கண்டித்தாள்."

"சுதா மேல் அப்படி என்ன கோபம் ?" என்றான்.

"சுதா, நான் முதல் நாள் வீட்டுக்கு வந்த போதே, எல்லா உறவினரிடமும் அக்கா தான் நம் திருமணத்தைச் சாமர்த்தியமாகச் செய்ததாகச் சொன்னாள் . அதை யார் எப்படி எடுத்துக் கொள்வார்கள் என்று தெரியாதே ! சமயம் கிடைக்கும் போதெல்லாம் இது போலவே பேசிக்கொண்டிருந்தாள்."

"யார் அது சுமா ?" என்றான்.

“உங்களுக்குத் தெரியாதா ? முதலில் அத்தை உங்களுக்காகப் பார்த்த பெண் . ரொம்பவும் பெரிய இடமாம் . இந்து அக்கா சொன்னாள் .”

மனோகருக்கு இப்போது நினைவு வந்தது . விஜய ஒரு முறை அவனிடம் பேசி இருந்தாள் . ஆனால் அவன் மனதில் பதிந்த பேர் சாருமதி மட்டும் தானே .

“யாரென்றே தெரியாத பெண்ணை என்னுடன் இணைத்துப் பேசுவது எப்படி முடிந்தது .”

“ஐயோ ! பெரிய தவறு தான் . ஆனால் அவளைப் பார்த்த பிறகு தெரிந்தது , உங்களுக்கு அவளை நிச்சயம் பிடிக்காது .”

அவளிடம் இருந்து சற்று தள்ளி அமர்ந்தான் . அவன் பார்வை கூர்மையாக , “இல்லை இல்லை , அவள் நம் வீட்டிற்கு வந்திருந்தாள் . அப்போது பார்த்தேன் .” அவன் கோபத்துடன் வேறு புறம் திரும்ப , சாரு சட்டென்று அவன் பார்த்திருந்த திசை பக்கம் வந்து நின்றாள் .

“மனோ ! தயவுசெய்து கோபித்துக் கொள்ளாதீர்கள் ! எனக்கு

ரொம்ப கஷ்டமாக இருக்கிறது. முதலில் நான் நிறைய யோசித்தேன் . உங்கள் வீட்டிற்கு ஏற்றபடி என்னால் இருக்க முடியுமா? என்னால் அக்காவுக்குச் சிக்கல் வரக் கூடாதென்று எல்லாம் யோசித்தேன் . ஆனால் இப்போது உங்களுக்கு என் மேல் வெறுப்பை உண்டாகி விட்டேனோ என்று நினைக்கும்போதே..” அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

மனோகருக்கும் அதற்குமேல் அவள் வருந்துவதைப் பார்க்க முடியவில்லை. அவளை அணைத்துக் கொண்டான்.

” நீ என்னை நேசிக்கவில்லை , என்னைப் பிடித்து திருமணம் செய்யவில்லை என்று நினைத்துத்தான் நானும் உன்னுடன் பேசாமல் இருந்தேன் . நீ உன் இடத்தில் வேறு பெண்ணை வைத்துப் பேசவும் , உனக்கு என் மேல் காதல் இல்லையோ என்று யோசித்தேன். போனில் நீ பேசியது என்னை வெகுவாக பாதித்தது . கட்டாயத்தினால் என்னுடன் இருக்கிறாய் என்பதை என்னால் சகிக்க முடியவில்லை.”

அவள் அவன் முகத்தைப் பார்த்தாள் .“என்ன?” என்று

கேட்டான்.

“அது..”

“தெரியும் ! உன் அக்கா சொன்னார்கள் !முதலில் நீ திருமணத்திற்குச் சம்மதிக்கவில்லை . நீ ஏன் சம்மதிக்கவில்லை என்று சொன்னார்கள். அண்ணாவைப் போல் நானும் இருப்பேனோ என்று பயந்தாய் என்று சொன்னார்கள் .என்னிடம் நீ பேசி இருக்கலாமே !”

“நீங்கள் எப்படி என்று யோசிப்பதை விட , அத்தை எப்படி இதைப் பார்ப்பார்கள் என்று தான் அதிகம் யோசித்தேன் . மாமாவிடம் பெற்றோருக்காக எந்த உதவியையும் எதிர்பார்க்கக் கூடாது என்று தான் அத்தை அடிக்கடி இந்துவிடம் சொல்வார்கள் . எனக்கும் அது பொருந்தும் என்று நினைத்தேன் . அம்மா அப்பா பின்னாளில் தனியே நிற்கவேண்டுமோ என்று பயந்தேன்.”

“என்மேல் உனக்கு நம்பிக்கை வரவேண்டும் என்றால் நான் என்ன செய்ய வேண்டும் !”

“இல்லை மனோ ! இதெல்லாம் எனக்கு அப்போதிருந்த பயம் . இப்போது எனக்கு எந்த பயமும் இல்லை .நீங்கள் அப்பா அம்மாவிடம் பேசும் விதமே எனக்கு அந்த பயத்தைப் போக்கி விட்டது .”

மனோகர் லேசாகச் சிரித்தான் . “நான் நிஜமாகச் சொல்கிறேன் !” என்றாள் சாரு .

“தெரிகிறது .” என்று மீண்டும் சிரித்தான் .

வெளியே தாமரையின் குரல் கேட்டது . “சாரு , வந்து மாப்பிள்ளைக்கு பழச்சாற்றை எடுத்துக்கொடு .”

“இதோ வருகிறான்” என்று செல்ல முயன்றவளின் கையை பற்றி நிறுத்தினான் .

“முதலில் முகத்தை நன்றாக கழுவிட்டு வா . உன் அம்மா பாவம் வருத்தப்படுவார்கள் .” என்றவன் ஓடிக்கொண்டிருந்த டிவியை பார்த்தான் . அது வெகுநேரமாக ஓடிக்கொண்டுதான் இருந்திருக்க வேண்டும் . சத்தம் முற்றிலும் குறைக்க பட்டறிந்தது .

அதை அணைக்க சென்றவன் , முகம் கழுவிவிட்டு வந்த சாருவைப் பார்த்துக் கேட்டான் ,“இதுபோன்ற படங்கள் தான் உனக்குப் பிடிக்காதே !இதையா பார்த்துக்கொண்டிருந்தாய் .”

“வேறென்ன செய்வது! மாலையில் அப்பா வந்ததும் ஏன் முகம் இப்படி இருக்கிறது என்று கேட்டால் , படத்தின் மேல் பழியைப் போட்டு விடலாம் .” என்றாள் சாதுவாக .

மனோ அவளை ஆழமாகப் பார்த்தான் . கணவன் மனைவிக்குள் சண்டை என்பதையே பெற்றோரிடம் மறைக்க முயற்சி செய்திருக்கிறாள் . அவர்கள் வருத்தப்படக்கூடாது என்று சொல்லாமல் இருந்திருக்கலாம் . எத்தனை பெண்கள் இப்படி இருக்கிறார்கள். மீண்டும் அவளை அணைத்துக் கொண்டான் .

“இனிமேல் இப்படி நடக்காமல் இருவரும் பார்த்துக் கொள்ளலாம் .” என்றான் .

சில கணங்கள் கணவன் அணைப்பில் அப்படியே நின்றவள் ,வெளியே ஏதோ சத்தம் கேட்க,

“வாருங்கள் அம்மா மீண்டும் அழைப்பதற்குள் முன்னறைக்குச் செல்லலாம்.” என்று சாரு வேகமாக வெளியே வந்தாள்.

சாருவைப் பார்த்ததும் கூடையுடன் சென்று கொண்டிருந்த தாமரை , “இதோ மேசையில் எல்லாம் வைத்திருக்கிறேன் . மாப்பிள்ளைக்குக் கொடு . காய் வண்டி வெளியே நிற்கிறது . நான் பார்த்துவிட்டு வருகிறேன்.” என்று வெளியேறினாள்.

சட்டென்று மனோகரிடம் திரும்பி , “அக்கா உங்களிடம் எப்போது பேசினாள்.”என்று விசாரித்தாள்.

மெதுவாகத் தட்டிலிருந்ததை கொறித்தவாறு ,“இன்றுதான் . என் தங்கை உங்களால் தான் என்னை மறந்து அம்மா வீட்டிற்கு போய்விட்டாள் என்றார்கள்”. அவனை முறைத்துப் பார்த்துவிட்டு , ஏதோ நினைவு வந்தவளாய் “ஐயோ ! அவளுக்குத் தலை சுற்றல் இப்போது எப்படி இருக்கிறது . அதை நான் மறந்து விட்டேன் . எல்லாம் உங்களால் தான் !” என்றாள் சாரு .

அவள் செல்லைத் தேடினாள். அதில் சார்ஜ் இல்லை. “உங்கள் போன்-ஐ கொடுங்கள்” என்றாள்.

“அக்கா என்றதும் என்னை மறந்துவிட்டாயே ! நான் முக்கியமா இல்லை உன் அக்காவா?”

“பதில் உங்களுக்கே தெரியும். நான் சொல்ல மாட்டேன்!”

சிரித்தபடி அவன் போன்-ஐ நீட்டினான். “உன் அக்காவை நன்றாகப் பார்த்துக் கொள். அப்போது தான் நாளை உனக்கு வரும் போது இதே போல் பார்த்துக் கொள்வார்.” என்றான்.

போனில் வீடு எண்ணைத் தட்டியபடி, “அவள் என்ன பார்த்துக்கொள்வது ! எல்லாம் என் கணவர் பார்த்துக் கொள்வார். வேறு யாரும் தேவையில்லை.” என்றாள் பெருமையாக.

***மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:***

*மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.*

***ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:***

*ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.*

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும்,

சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் *Creative Commons* எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி

நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு

அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச்

செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

***FREETAMILEBOOKS.COM***

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

*PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT*

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை

எடுத்து, அவற்றை *LibreOffice/MS Office* போன்ற *wordprocessor*-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை *"Creative Commons"* உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் *freetamilebooksteam@gmail.com* எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், *ebook reader* ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப்

பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து *ebook reader* போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் *tablets* மற்றும் *ebook readers* போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. *http://www.vinavu.com*
2. *http://www.badriseshadri.in*
3. *http://maattru.com*

4. http://kaniyam.com

5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with an-

*droid, iOS* போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் *support* செய்யும் *odt, pdf, ebub, azw* போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை *"Creative Commons"* உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

*http://creativecommons.org/licenses/*

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOK-STEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- *EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*
- *Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks*
- *Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948*

## இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?

குழு – *http://freetamilebooks.com/meet-the-team/*

### *SUPPORTED BY*

கணியம் அறக்கட்டளை- *http://kaniyam.com/foundation*

**தொலை நோக்கு – *Vision***

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – *Mission***

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப,

தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle

- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- *FreeTamilEbooks* – ஆன்டிராய்டு செயலி
- *FreeTamilEbooks* – ஐஒஎஸ் செயலி
- *WikisourceEbooksReport*இந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- *FreeTamilEbooks.com – Download counter* மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

- *http://OpenStreetMap.org* ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் *http://OpenStreetMap.org* ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- *http://Ta.wiktionary.org* ஐ ஒழுங்குபடுத்தி *API* க்கு தோதாக மாற்றுதல்
- *http://Ta.wiktionary.org* க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா *http://FreeTamilEbooks.com* மின்னூல்களையும் *Google Play Books, GoodReads.com* ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி

உருவாக்குதல் ( *aamozish.com/Course_preface* போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும்

மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், *GNU GPL, Apache, BSD, MIT, Mozilla* ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

***Kaniyam Foundation***

***Account Number : 606 1010 100 502 79***

***Union Bank Of India***

***West Tambaram, Chennai***

***IFSC – UBIN0560618***

***Account Type : Current Account***

குறிப்பு: சில *UPI* செயலிகளில் இந்த *QR Code* வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், *IFSC code* ஐ பயன்படுத்தவும்.

*Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.*